[24th March 1961

**THE HON. SRI M. A. MANICKAVELU** : கும்பகோணம் முனிசிபாலிடிக்கு கடனாக ரூ. 84,500. கிராண்டாக ரூ. 64,700. மதுரைக்கு ரூ. 3,43,500 கடனாக வழங்கப்பட்டிருக்கிறது.

DEPUTY SPEAKER : Questions are over.

(NOTE—ANASTERISK ATTHE COMMENCEMENT OF A SPEECH INDICATES REVISION BY THE MEMBER)

## II—INFORMATION *RE* CLOCKSIN THE CHAMBER.

**SRI V. K. KOTHANDARAMAN** : நம்முடைய சபையிலே உள்ள கடிகாரத்தில் 5 நிமிஷத்திறகு முன்னாலே 7 நிமிஷம் வித்தியாசத்தைக் காட்டிக்கொண்டு இருந்தது. இப்போது திடீரென்று அது மாற்றியமைக்கப் பட்டிருக்கிறது. இனிமேலாவது இந்த மாதிரி ஏமாற்றங்கள் இல்லாத அளவிற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

**DEPUTY SPEAKER** : எனக்கு எதிரிலே இருக்கிற கடிகாரம நனறாகத் தான் இருந்தது. இப்போது எல்லா கடிகாரங்களும் சரியாக இருக்கின்றன. கொஞ்ச நேரததிற்கு முன் பக்கவாட்டிலே உள்ள கடிகாரங்கள் இரண்டும் நின்று இருந்தன. அவ்வளவுதான்.

## III.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961—1962 —*Cont.*

DEPUTY SPEAKER : Now the discussion on voting on Demands will be continued.

### DEMAND XXVI—COMMUNITY DEVELOPMENT PROJECTS, ETC.

THE HON. SRI C. SUBRAMANIAM : On the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 5,01,99,900, under Demand XXVI—Community Development Projects, etc.'

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Government be granted a sum not exceeding Rs. 5,01,99,900 under Demand XXVI—Community Development Projects, etc. '

SRI S. M. ANNAMALAI : Sir, I move my cut motion—

'That the allotment of Rs. 5,01,99,900 under Demand XXVI—Community Development Projects, etc. be reduced by Rs. 100. '

DEPUTY SPEAKER : Cut motion moved—

'That the allotment of Rs. 5,01,99,900 under Demand XXVI—Community Development Projects, etc. be reduced by Rs. 100. '

The other Demand may also be moved now.

24th March 1961]

DEMAND XXXIV—OTHER MISCELLANEOUS CONTRIBUTIONS AND ASSIGNMENTS.

THE HON. SRI C. SUBRAMANIAM : On the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,64,50,000 under Demand XXXIV—Other Miscellaneous Contributions and Assignments.'

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,64,50,000 under Demand XXXIV—Other Miscellaneous Contributions and Assignments.'

As the hon. Member, Sri K. Sattanatha Karayalar, who has given notice of a cut motion is not in his seat, his cut motion cannot be moved.

The Demand and the cut motions are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே சமுதாய நலத் திட்ட நிர்வாகத்திற்கு வேண்டி இங்கு கொண்டு வந்துள்ள மான்யக் கோரிக்கையின் மீது, எனது வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல முற்படுகிறேன். என்னுடைய வெட்டுப் பிரேரணையானது. இந்தச் சட்டம் சரிவர அமுல் நடத்தப்பட்டிருக்கிறதா....

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : On a point of order, Sir. கனம் அங்கத்தினர் எனது வெட்டுப் பிரேரணையை ஆதரித்து என்று பேசுகிறாரே, இப்படி அவர் பேசலாமா ?

DEPUTY SPEAKER : The hon. Member, Sri S. M. Annamalai has moved a cut motion under 'Demand XXVI—Community Development Projects, etc.'

SRI S. M. ANNAMALAI : இந்தச் சட்டமானது நம்முடைய மாகாணத்தில் சரிவர அமுல் நடத்தப்படவில்லை. இதிலே குறிப்பாக, சமுதாய நலத் திட்டப் பகுதியிலே உண்மையிலேயே சட்டத்தை அமுல் நடத்தப்படவில்லை என்ற குற்றச் சாட்டை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகின்றேன். சமுதாய நலத் திட்டப் பகுதிகளுக்கு நாம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வருகின்றபோது, நம்முடைய நிர்வாகத்திலே பலவாறுகச் செய்ய வேண்டுமென்ற அடிப்படையில்தான் நாம் சட்டத்தைக் கொண்டுவந்தோம். ஆனால் இந்தச் சட்டம் 1958-லே சட்டமாகியும்கூட, ஏதோ விதிகள், சட்டங்கள் என்ற அளவிலே இருக்கிறதே தவிர, ஒரு ஒழுங்கான சட்ட திட்டங்களை இதுவரையில் பிறப்பிக்கப்படாமல் இருக்கிறது.

அதைப்போலவே, "கைட்" என்னும் ஒரு புத்தகத்தை இப்பொழுது பிரசுரித்திருக்கிறார்கள். அந்தப் புத்தகத்தை நமக்கு சட்ட மன்றத்தில்தான் கொடுக்கப்படுகின்றதே தவிர, அதற்கு முன்பு ஆளும் கட்சியிலே இருக்கின்ற காங்கிரஸ்காரர்களுடைய கையிலே அந்தப் புத்தகத்தை நாம் பார்க்க நேரிடுகின்றது. அதைப் பார்க்கின்றபோது, நம்மைப்போலுள்ள சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு அப்படிப்பட்ட புத்தகங்கள் நம் கைக்கு வருவதில்லை. ஆகவே ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களுக்கு எப்படியும் முன்கூட்டியே இப்படிப்பட்ட புத்தகங்களைக் கொடுத்துவிடுகின்றார்கள் என்ற உண்மை புலனாயிற்று. உண்மையிலேயே, அந்தப் புத்தகத்தைப் பார்க்கின்றபோதும், இப்போது அந்த சட்டங்களை அமுல் நடத்தப்படுகின்றதையும் பார்க்கின்றபோது நிர்வாகத் துறையிலே அதிகாரம் அதிகமாக்கப்

பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் என்று ஏற்படுத்தி, அந்த பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் தலைவருக்கு எந்த விதமான அதிகாரத்தையும் கொடுக்கப்படவில்லை. இப்போது அதன் தலைவருக்கு வரி வசூலிக்கக்கூடிய அதிகாரத்தை மட்டும்தான் கொடுத்திருக்கிறார்களே தவிர, நிர்வாக அதிகாரத்தை அவருக்குக் கொடுக்கவில்லை. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் நிர்வாக அதிரிாரத்தை அங்குள்ள பீ.டீ.ஓ. அதாவது கமிஷனருக்குத்தான் கவுன்சிலை நிர்வகிக்க வேண்டிய அதிகாரத்தை அளித்திருக்கிறார்கள்.

அது போலத்தான் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ஒரு ரிகார்டு பார்க்கவேண்டுமென்று கேட்டாலும்கூட, அதில் ஏதாகிலும் 'ப்ரெஜுடிஷியல் மாட்டர்'' இருக்கிறது என்று தெரிந்தால் பி. டி. ஓ. அந்த ரிகார்டை கொடுக்க மறுக்கலாம் என்ற ஒரு விதி இருக்கிறது. அப்படி கொடுக்க மறுக்கிறபொழுது வேண்டுமானால் இன்ஸ்பெக்டருக்கு எழுதி, இன்ஸ்பெக்டர் அதை அனுமதித்தால் அதன்பிறகு வேண்டுமானால் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு அந்த ரிகார்டை தரலாம் என்ற ஒரு விதி உண்மையிலேயே தரப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்கிறபொழுது, இந்த நிர்வாகத்தில் வரி போடுகிற அதிகாரத்தைத் தான் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு தரப்பட்டிருக்கிறதே தவிர, பிற அதிகாரங்கள் அனைத்தும் பி. டி. ஒக்களுக்கு விதிகளின் மூலம் தரப்பட்டிருக்கிறது. நாம் எந்த உண்மையான ஆர்வத்தில் இந்த நிர்வாகத்தைப் பிரித்து பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு தரவேண்டும் என்று நினைத்து இம்மாதிரி ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தோமோ அச் சட்டத்தின் நோக்கம் உண்மையிலேயே நிறைவேறவில்லை. நேற்றுகூட சட்டமன்றத்தில் அமைச்சர் அவர்கள் பதில் சொன்னபொழுது 'ஜீப் இன் சார்ஜ்' யார் என்று கேட்டபொழுது, கமிஷனரிடத்தில்தான் ஜீப் இருக்கும் என்று சொன்னார். ஜீப் உபயோகிப்பதற்கு வேண்டி இதற்கு முன்னால் 275 லிட்டர் பெட்ரோல் தரப்பட்டிருக்கிறது. இப்பொழுது 50 லிட்டர்தான் அதிகமாக ஆக்கப்பட்டிருந்தது. (குறுக்கீடு). 50 லிட்டர்தான் அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சேர்மன் ஜீப் வேண்டுமென்று சொன்னால், கமிஷனரை கேட்டுத்தான் ஆகவேண்டும். அவருடைய உத்தரவு இல்லாமல் சேர்மன் அந்த ஜீப்பை உபயோகிக்க முடியாது என்ற நிலை இருந்து கொண்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சேர்மன் ஒரு ரிகார்டு தேவை என்று பி.டி.ஒவைக் கேட்டால், அவர் எழுத்து மூலமாகவே எழுதி அனுப்புகிறார் 'அந்த ரிகார்டை உங்களிடம் தரமுடியாது, வேண்டுமானால் என் அலுவலகத்தில் வந்து பார்த்துக் கொள்ளலாம்' என்று. பஞ்சாயத்து யூனியன் மெம்பர்கள் வந்து கேட்டால் அலுவலகத்தில் வந்து பார்த்துக்கொள்ளலாம் என்று சொல்லாப். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவருக்கு என்று தனி அலுவலகம் கிடையாது. ஆகவே, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சேர்மன் ஒரு இடத்தில் அலுவலகத்தை வைத்துக்கொண்டு அந்த இடத்திற்கு ரிகார்டை அனுப்பவேண்டுமென்று சொன்னால், 'நான் அனுப்ப முடியாது. என்னுடைய அலுவலகத்தில் வந்து பார்த்துக் கொள்ளுங்கள்' என்று பி.டி.ஓ. எழுதி அனுப்புகிறார். இதைப் பார்க்கிறபொழுது உண்மையில் நாம் எந்த எண்ணத்தில் இந்த நிர்வாகத்தை பிரித்து தரவேண்டுமென்று ஆசைப்பட்டோமோ அந்த எண்ணம் நிறைவேரவில்லை என்றுதான் இந்த சட்ட மன்றத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

141-வது பிரிவுப்படி பஞ்சாயத்து யூனியன் கணக்குகளை ஆடிட் செய்வதற்கு ஆடிட்டர்களை நியமிக்கப்போகிறோம் என்று சொன்னாலும் கூட, இதுவரையில் ஆடிட்டர்களை நியமித்தார்களா என்றால் கிடையவே கிடையாது. அதற்குப் பதிலாக யூனியன் கவுன்சில் மீட்டிங் நடக்கிறபொழுது, பி.டி.ஒ-வும், 'ஈ.ஒ.' பஞ்சாயத்து அவர்களும் ஒன்றாகச் சேர்ந்து கொண்டு பஞ்சாயத்து போர்டு தலைவர்களை மிரட்டுகிறார்கள். 'ஈ.ஒ.' பஞ்சாயத்து போர்டு கணக்குகளை ஆடிட் செய்யக்கூடிய நிலைமை இன்னும் இருக்கிற காரணத்தினால் 'நாங்கள் சொல்லுகிறபடிதான் வோட் அளிக்கவேண்டும்' என்று பயமுறுத்துகிறார்கள். நாங்கள் சொல்லுகிற சொல்லை மீறிபோகக் கூடாது என்று மறைமுகமாக பயமுறுத்துகிறார்கள். அதேபோலத்தான்

24th March 1961] [Sri S. M. Annamalai]

பி. டி. ஓ. 'என்னிடத்தில தான் பில் வாங்க வரவேண்டும். நான் சொல்லுகிறபடி கேட்கவேண்டும் என்று மறைமுகமாக பயமுறுத்தக் கூடிய நிலைமையை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் நான் நேரில் கண்டிருக்கிறேன். ஆகையினால் இந்த நிர்வாகத்தை எந்த அளவுக்கு பிரித்துத் தரவேண்டுமென்று நாம ஆசைப்பட்டோமா அந்த அளவுக்கு யூனியன் கவுன்சில் உண்மையிலேயே நடைபெறவில்லை. அதிகாரிகளுடைய ஆட்சிதான் மறைமுகமாக அங்கே நடந்துகொண்டு வருகிறது. அதுபோலத் தான் விதிகளும் ஒன்றன்பின் ஒன்றாக அதிகாரிகளுக்குத்தான் அதிகாரத்தை கொடுக்கிறது.

'அபாயிண்டுமெண்டு கமிட்டி' என்று ஒரு கமிட்டியை நியமிக்கலாம். என்று சட்டத்தில் போட்டிருக்கிறோம். அந்தக் கமிட்டியின் வேலை என்னவென்றால் நபர்களை செலக்ஷன் செய்யக்கூடிய ஒரு நிலைதான் இருக்கிறதே ஒழிய அந்த 'காண்டிடேட்டுக்கு' எந்த இடத்தில் உத்தியோகம் தரலாம் என்ற அதிகாரம் கமிட்டிக்கு கிடையாது. கமிட்டி செலக்ஷன் செய்த பின், அந்த நபரின்மீது கமிஷனருக்கு விருப்பம் இல்லையென்றால் அந்த ஆள் எந்த இடத்தில் உத்தியோகம் தேவை என்று சொல்லுகிறாரோ அந்த இடத்தில் கொடுக்காமல் இடத்தை மாற்றி 'எங்கேயோ ஒரு இடத்தில் மலைப் பகுதியில் உத்தியோகம் தருகிறேன், போகிறாயா' என்று கேட்க, 'போக முடியாது' என்று அவர் சொல்ல, 'அவர் போக மறுத்துவிட்டார்' என்று சொல்லக்கூடிய இம்மாதிரி பலவித ஊழல்கள் நடக்கின்றன. 'அபாயிண்டுமெண்டு கமிட்டி'–க்கு செலக்ஷன் செய்யக்கூடிய ஒரு அதிகாரம் இருக்கிறதே ஒழிய அவர்களை உத்தியோகத்திற்கு இந்த இடத்தில் போடுங்கள் என்று சொல்லக்கூடிய நிலைகூட 'அபாயிண்டுமெண்டு கமிட்டிக்கு' கிடையாது. நிர்வாகத் துறையிலே பார்க்கிறபொழுது இப்படிப்பட்ட ஊழல்கள் மேலும் மேலும் நடைபெறுகின்றன. விதிகளின் மூலம் உத்தரவு பிறப்பித்து அதிகாரத்தை நிர்வாகத் துறையினருக்கு மேலும் மேலும் அதிகமாக்கிக் கொண்டு வருகிறோம். இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையைப் பார்த்தால் வரி போடுவதற்குத்தான் பஞ்சாயத்து யூனியன் கவுன்சலுக்கு அதிகாரம் இருக்கிறது.

பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு பட்ஜெட் தயார் செய்யப்படுகிற பொழுது ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனுக்கும் வேறு விதமான பட்ஜெட் தயார் செய்யப்படுகிறது. கலசப்பாக்கம் சமுதாயநலத் திட்டத்திற்கு ஒரு வரவு செலவுத் திட்டம், போளூர் சமுதாய நலத்திட்டத்திற்கு ஒரு வரவு செலவுத் திட்டம் இப்படி இருக்கிறது. நான் கேட்டேன், 'லோகல் செஸ் ஸர்சார்ஜ்' அடுத்த பசலியில் தான் வசூல் செய்யவேண்டுமே தவிர இந்த பசலியில் வசூல்செய்யமுடியாது. காரணம் பசலி முடிந்து விட்டது' என்று பி.டி.ஓ.-விடம் சட்டப் புஸ்தகத்தைக் காண்பித்துச் சொன்னேன். பி.டி.ஓ. 'அம்மாதிரி வசூல் செய்வதற்கு மேலேயிருந்து உத்தரவு வந்துவிட்டது' என்று சொல்லி ஆகையினால் 'டோகன் கிராண்டு' வாங்கித்தான் தரவேண்டும் என்று வரவு செலவுத் திட்டத்தை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு முன்னால் கொண்டு வந்திருக்கிறார்கள். பட்ஜெட் எப்படி தயார் செய்யவேண்டுமென்று உண்மையிலேயே நான் சொல்லியும் கூட கமிஷனருக்கு விளங்கவில்லை. அதற்கு முக்கிய காரணம் இன்னும் அதற்கான விதிகளை நாம் விதிக்கவில்லை. ஒன்றுகூட அமைச்சர் சொன்னார்கள். சமுதாய நலத் திட்டப் பகுதியிலே கட்சிப் பிரசாரம் நடக்கிறது என்று சொன்னால், தி. மு. க. தான் அப்படி பிரசாரம் செய்து கொண்டு வருகிறது; தி. மு. க. தான் அதனுடைய கொள்கையை அந்த இடத்தில் பரப்பிக்கொண்டு வருகின்றது. என்று சொன்னார்கள். நாங்கள் சொல்லுகிறோம். உண்மையிலேயே நாங்கள் சொல்லுகிற குற்றச்சாட்டிலிருந்து தப்பித்துக்கொள்ளுவதற்காக வேண்டி அவர்கள் அப்படிச் சொல்லுகிறார்களே தவிர, வேறு ஒன்றும் இல்லை. இப்படி கட்சி சார்பில் பணியாற்றிக்கொண்டு வருகிறார்கள் என்று சொன்னால், 'எந்த இடத்தில் அம்மாதிரி பணியாற்றுகிறோம், வேண்டுமானால் தி. மு. க. தான் அவர்கள் கொள்கையை அம்மாதிரி பரப்பிக்கொண்டு வருகிறார்கள்' என்று சொன்னார்கள் ஒரு நிகழ்ச்சியை

சொல்லுகிறேன். ஏறத்தாழ நான்கு ஆண்டுகளாக இந்த சட்டமன்றத்தில் அங்கத்தினராக இருக்கிறேன். நான் இதுவரையிலும் என்னுடைய தொகுதியிலுள்ள சமுதாய நலத் திட்டத்தைப் பற்றியோ அல்லது மற்ற சமுதாய நலத் திட்டங்களைப் பற்றியோ நான் சொல்லியது கிடையாது. கலசப்பாக்கத்தில் ஒரு ஸ்பின்னிங் ஆர்கனைஸர் போட்டார்கள். அவர் ஆற்காட்டிற்கு மாற்றப்பட்டார். வந்ததும் அவர் 'பப்ளிக் மீடிங்' போட்டு காங்கிரஸ் கட்சி சார்பாக நன்றாக, அழகாகப் பேசுகிறார். காங்கிரஸ் கட்சியை ஆதரிக்கவேண்டுமென்று பேசுகிறார். இதைவிட கட்சிப் பிரசாரத் திற்கு வேறு என்ன உதாரணம் இருக்கமுடியும்? பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மீடிங் நடந்தவுடன் சேர்மன் கூட்டத்தை ஒத்திவைத்துவிட்டுச் சென்ற பிறகு கூட, 'மினிட்' புஸ்தகத்தை எடுத்துக்கொடுத்து மற்ற பஞ்சாயத்து போர்டு தலைவர்களைக்கொண்டு கூட்டத்தை நடத்துவதற்கு பி.டி.ஓ. ஏற்பாடு செய்கிறார்கள். இந்த முறையில் இந்தச் சட்டத்தின் கீழ் நிர்வாகம் நடக்கிறது. இதை ஆராய்ந்து அலசிப் பார்க்கவேண்டும்.

அதுபோல பிளாக்குகள் ஏ.பி.ஸி.டி. என்ற அடிப்படையில் பிரிக்கும் பொழுது, 'ஏ.பி.ஸி.டி. என்று பிற்பட்ட பகுதிகள் என்ற அடிப்படையில் பிரிக்கப்போகிறோம் என்று சொல்லப்படுகிறது. அப்படி பிரிக்கப்படும் பொழுது, பல ஆண்டுகளாக சமுதாய நலத்திட்டம் சில இடங்களில் அமுலில் இருந்தால் கூட, அதாவது போளூர், கலசப்பாக்கம் ஆகிய இடங்களில் சமுதாய நலத் திட்டம் பல ஆண்டுகளாக அமுலில் இருந்தால் கூட—அங்கே ஜவ்வாது மலை இருக்கிறது—மலைவாசிகள் அங்கு அதிகமாக இருக்கிறார்கள். இந்த திட்டங்கள் அங்கு அமுல் நடத்தப்பட்டாலுங்கூட, அந்த இடத்தில் அவர்கள் இன்னும் முன்னுக்கு வரவில்லை. ஆகையினால் அந்தப் பகுதியை பிற்பட்ட பகுதியாக சேர்க்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மாதர் இலாகா மத்திய சர்க்காரால் நடத்தப்படுவது 1-4-61 தேதியி லிருந்து கலைக்கப்படுகிறது என்று நோட்டீஸ் பார்த்தேன். அப்படிக் கலைக்கப்பட்டால் அதிலுள்ள பெண் உத்தியோகஸ்தர்கள் அதிகமாக பாதிக்கப்படுவார்கள். ஏதோ வடநாட்டில் மாதர் இலாகா சரிவர நடக்க வில்லை என்ற காரணத்திற்காக மத்திய சர்க்கார் இதை கைவிடலாம். மத்திய சர்க்கார் கைவிடுவதன் காரணமாக 'நாங்களும் கைவிடுகிறோம்' என்று சொல்லுவது அவ்வளவு நியாயம் அல்ல. இதையும் கவனிக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: I allot ten minutes to each hon. Member. How long will the Hon. Minister take for his reply?

THE HON. SRI C. SUBRAMANIAM: Half an hour, Sir.

DEPUTY SPEAKER: All right. Hon. Member Sri M. William may now speak.

* **SRI M. WILLIAM**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே. இந்த மானியக் கோரிக்கையை ஆமோதித்துப் பேசும்போது, கிராமப் புறங்கள் முன்னேற வேண்டும் என்பதற்காக சமுதாய நலத் திட்டங்கள், பஞ்சாயத்துக்கள் இவை மூலம் செய்யப்பட்டு வருகிற காரியங்களை எல்லோரும் அறிவோம். நாட்டுப் பிரதேசங்கள் முன்னேற வேண்டும். அவர்கள் வாழ்க்கைத்தரம் உயரவேண்டும், வேலையில்லாத் திண்டாட்டம் அகற்றப்பட வேண்டும், பசி, பிணி பட்டினி முதலியவை அகற்றப்பட வேண்டும் என்பதற்காகத்தான் இந்த திட்டங்களைத் தீட்டி, நல்ல முறையிலே செய்யப்பட்டு வருகின்றன என்பதை அனைவரும் அறிவோம்' ஆனால், நாம் எதிர்பார்த்தபடி இந்த திட்டங்களில் வெற்றி காணக் கிடைக்கவில்லை என்றும், ஒரு சில சிக்கல்கள் ஆங்காங்கே ஏற்பட்டிருப் பதன் காரணமாக இந்த திட்டங்கள் நல்ல முறையிலே நடக்கவில்லை என்றும் கூற விரும்புகிறேன். இந்த திட்டங்களெல்லாம் நல்ல வெற்றி யடையவேண்டுமென்றால், அதிகாரிகளும், மக்களும் ஒன்றுபட்டு உழைக்கா விட்டால், நிச்சயமாக நல்ல பலன் கிட்டாது. அப்படி அதிகாரிகளும்,

24th March 1961] [Sri M. William]

மக்களும் ஒத்துழைக்கக் கூடிய சூழ்நிலையை சிருஷ்டிக்க வேண்டியது சர்க்காருடைய கடமை. நமது கிராமப் பிரதேசங்கள் முன்னேற்றம் அடையவேண்டுமானால், அதற்காக சில பல திட்டங்கள் வகுத்திருக்கிறார்கள்; பொருளாதார முன்னேற்றம் அடையவேண்டுமானால், கிராமங்களில் கிராமத் தொழில்களை கூட்டுறவு அடிப்படையில் நிறுவவேண்டும் என்பதற்காக கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கவேண்டும் என்ற கருத்துடன் 1,000 ஜனத்தொகை கொண்ட கிராமங்களுக்கு சிறுசிறு சங்கங்கள் ஏற்படவேண்டும் என்று கொண்டுவருகிறார்கள். அதே சமயத்தில் அந்த ஜனங்கள் ஒன்றுபட்டு, பணம் வசூல் செய்து, ஒரு சொஸைட்டி ரெஜிஸ்டர் செய்து தரவேண்டும் என்று கேட்டால், அநேக காலம் ஆகிறது ; காரணம் என்னவென்றால், அருகாமையில் இருக்கும் ஆட்சேபணையினால், அப்படி அருகாமையில் இருக்கும் சொஸைட்டியின் ஆட்சேபணையைக் கவனிக்க வேண்டியதில்லை. ஆயிரம் ஜனங்கள் உள்ள கிராமத்திலும் ஒரு கூட்டுறவு சங்கம் ஆரம்பிக்கவேண்டுமானால், அடுத்த கிராமத்தின் அபிப்பிராயம் கேட்கவேண்டிய அவசியமில்லை. கூட்டுறவு சங்கங்கள் அமைப்பதில் இருக்கும் இந்த சிக்கலைத் தீர்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கிராமப்புறங்களுக்கு ரோடு வசதிகள் மிகவும் அவசியம் என்று அடிக்கடி கூறி வருகிறோம். ஒரு சில நபர்களால் வேலைகளுக்கு தடை ஏற்படுகிறது. அம்மாதிரி நிலையில் அந்த ஸ்தலத்தை ஆர்ஜிதம் செய்ய வேண்டியது சர்க்காரின் கடமை. பஞ்சாயத்துக்கள் மூலமாக செய்வதானால், வருஷக் கணக்காக ஸ்தலம் ஆர்ஜிதம் ஆகாமல் இருக்கிறது. காலதாமதம் ஆகிறது. இந்தக் குறையிருந்தால் கிராமங்கள் எப்படி முன்னேற்றம் அடைய முடியும் ? ஆகவே இந்தச் சிக்கல்களைத் தீர்க்க வகைகளை வகுக்க வேண்டுமென்று வேண்டிக் கேட்கிறேன்.

விளவங்கோடு தாலுகாவில் மேல்புறம் சமூகநலத் திட்டத்தின்கீழ் ஒரு செங்கல் ஆலை ஆரம்பிக்க வேண்டும் என்று சர்க்காருக்கு மனு அனுப்பி ஒரு வருஷம் ஆகிறது. பணம் வசூல் செய்து ஜனங்கள் பாங்கியில் போட்டு வைத்திருக்கிறார்கள். அவர்கள் அதற்காக சொஸைட்டியை ரெஜிஸ்டர் செய்ய எதிர்பார்க்கிறார்கள். அதை சீக்கிரமாக ரெஜிஸ்டர் செய்யாததன் காரணமாக அவர்களிடையே அவநம்பிக்கை ஏற்படுகிறது. ஆகவே இம்மாதிரிக் காலதாமதம் ஏற்படாமல், உடனடியாக ஆவனச் செய்ய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

கிராமங்கள் முன்னேற்றம் அடையவேண்டும், முன்னேற்றம் அடைய வேண்டும் என்று சொல்லுகிறோம். ஆனால் ஆரம்பிக்கும் தொழில்களெல்லாம், கட்டணங்களில்தான் ஆரம்பிக்கிறோம். அந்த விஷயத்தில் விளவங்கோடு படுமோசமான நிலையில் இருக்கிறது. அது 3 லட்சம் ஜனத் தொகை கொண்டது; அங்கு ஒரு தொழிற்சாலையும் இல்லை. அங்கே ஒரு இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. தொழில் அமைச்சர் திரு. வெங்கட்டராமன் அங்கு விஜயம் செய்தபோது, அங்கே இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் ஆரம்பிக்கவேண்டும் என்று அவர்களை கேட்டதில், செய்யலாம் என்று சொன்னார்கள். ஆனால், இதுவரைக்கும், நடைமுறையிலே அது வரவில்லை. நாகர்கோவில் பட்டணத்தை தேர்ந்தெடுப்பதாகத் தெரிகிறது. அது ஒரு போதும் சரியில்லை. இம்மாதிரி ஸ்தாபனங்கள் மிகப் பிற்போக்கான இடங்களில்தான் ஆரம்பிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

விவசாயத்தை அபிவிருத்தி செய்யவேண்டும் என்று சொல்லுகிறோம். திட்டங்கள் தீட்டுகிறோம். ஆனாலும் குறைகள் இருப்பதால் முன்னேறவில்லை. குளங்கள், வரிகள் நல்ல நிலையில் இல்லாததால், விவசாயத்தில் க்ருஷியில் நஷ்டம் ஏற்படுகிறது. இவைகள் காலதாமதம் இன்றி நல்ல முறையில் செப்பனிடப்படவேண்டும்.

(Sri S. Ranganatha Mudaliar in the Chair.)

உரத்தை எடுத்துக்கொண்டால், விவசாயிகள் பல மைல்தூரம் போய், அம்மாதிரி அநேக நாட்கள் போய் வரவேண்டிய நிலை இருக்கிறது. அதுவும் காலத்தில் கிடைப்பதில்லை. இவைகளை அகற்றி தகுந்த காலத்தில்

அவர்களுக்குக் கிடைக்கச் செய்யவேண்டும். அவ்வண்ணம் செய்தால்தான், கிராமப் பிராந்தியங்கள் பொருளாதார அடிப்படையில் முன்னேற்றம் அடையும். விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கப் பல திட்டங்கள் இருக்கின்றன. கன்யாகுமரி மாவட்டத்தில் ஒரு சில கிராமங்களில் அக்ரிகல்சுரல் பாங்க் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அது மிகவும் திறம்பட அது வேலை செய்து வருகிறது. ஒவ்வொரு கிராமத்திற்கும் ஏற்றவாறு இந்த திட்டங்களை மாற்றியமைத்து நல்ல முறையிலே செயல்படச் செய்தால், கிராம மக்கள் பலன் அடைவார்கள். எல்லா கிராமங்களிலும் (Agricultural Bank) ஆரம்பித்து ஒழுங்குகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சமூகநல அதிகாரிகளிடம் விவசாயிகளுக்குக் கடன் கொடுக்க எத்தனையோ லட்சக்கணக்கான ரூபாய்களை கொடுத்திருக்கிறார்கள். ஆனால், அதனால் அதிகப் பிரயோஜனம் இல்லை. ஏனென்றால், தக்காவி ரூல்ஸ் என்று சொல்கிறார்களே அவை மிகக் கடுமையாக இருக்கின்றன. ஒரு கடன் வாங்க கிஸ்தித் தொகையில் 15 மடங்கு கொடுப்பதாகச் சொல்லுகிறார்கள். அந்தப் பகுதிகளில் ஒரு ஏக்கருக்கு $1\frac{3}{4}$ ரூபாய்தான் இங்கு கொடுக்க வேண்டும். ஆகவே ஒரு ஏக்கருக்கு 15 அல்லது 20 ரூபாய்கள்தான் கிடைக்கும். ஆகவே இதை மாற்றி வஸ்துவின் விலையை மதிப்பிட்டு, அதற்கேற்றவாறு கடன் கொடுக்க திட்டம் வகுக்கவேண்டும்.

கிராமப்புறங்களில் இன்னும் சில கஷ்டங்கள் இருக்கின்றன. க்ருஷி செய்வதில் விவசாயிகளுக்கு பல கஷ்டங்களும் ஏற்படுகின்றன. புறம்போக்கு குளங்களை ஆக்ரமித்து மரங்கள் நடுவது வழக்கமாக இருக்கிறது. அதை அதிகாரிகள் கவனிப்பதில்லை. ஒவ்வொரு ஆக்ரமிப்பையும் பற்றி அறிவிப்புக் கொடுத்தால், அதிகாரிகள் அந்த மனுக் கொடுத்த ஆளைப் பற்றி விசாரணை செய்ய ஆரம்பிக்கிறார்கள். அவர் பேரில் போலீசில் ப்ராது கொடுத்து, கஷ்டப்படுத்துகிறார்கள். இந்த விஷயம் பற்றி ரெவின்யூ அமைச்சரிடம் வேண்டுமானால் நான் சரியான முறையில் எழுத்து மூலம் தெரிவிக்க தயாராக இருக்கிறேன். விவசாயிகள் கஷ்டப்படுத்தப்படுவது சரியில்லை. அதிகாரிகள் ஜனங்களின் ஊழியர்கள், பப்ளிக் சர்வெண்ட்ஸ் என்ற மனோபாவம் உள்ளவர்களாக இருக்கவேண்டும். ஆகவே அம்மாதிரி நல்ல ஒரு சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அதற்கான வழிவகைகளைச் செய்யவேண்டும் என்று சொல்லிக்கொண்டு முடிக்கிறேன். வணக்கம்.

10-00 a.m.

* SRI P. G. MANICKAM: மதிப்பிற்குரிய சேர்மேன் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த மானியத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் தெரிவிக்க விரும்புகிறேன். இந்தத் திட்டமானது பொது ஜனங்களால் மிகவும் வரவேற்கத்தக்க திட்டமாகும். பொது ஜனங்களுக்கும் அதிகாரிகளுக்குமிடையே நெருங்கிய தொடர்பு ஏற்படுத்துவதன் மூலம் திட்டங்களை சரிவர நிறைவேற்றுவதற்காக அமைக்கப்பட்ட திட்டமாகும். இதைத்தான் ராமராஜ்யம் என்று மகாத்மா காந்தி அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். இந்த ராமராஜ்யம் வெற்றிகரமாக நடைபெற்றால்தான் சுயராஜ்யம் செழித்தோங்கினதாகும். முக்கியமாக இத்திட்டத்திலே ரோடுகள் ஐந்துவிதமாகப் பிரிக்கப்பட்டு இருக்கின்றன. National Highways, State Highways, Major District Board Roads, Other District Board Roads, Village Roads என்ற ஐந்து வகையிலே மேஜர் ஜில்லா போர்டு ரோடுகள் பஞ்சாயத்து யூனியன் பராமரிப்பின் கீழ் வருகின்றன. அதைப்போலவே "மற்ற ஜில்லா போர்டு ரோடுகளும் பஞ்சாயத்து யூனியன்களிடமே தரப்படுகின்றன. நபர் ஒன்றுக்கு 40 பைசா வீதம் கணக்கிட்டு அந்தத் தொகையானது பஞ்சாயத்து யூனியன்களுக்கு தலசாலை மானியம் என்ற முறையில் கொடுக்கப்போவதாகத் தெரிகிறது. இதற்காக 90 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்படிப் பிரித்துக் கொடுக்கப்படுகிற தொகையோடுகூட, பொது ஜனங்களுடைய உதவியும் பெறப்படுகிறது. இணைப்புச் சாலைகளைப் போடும் திட்டத்தைப் பொறுத்தமட்டில் உள்ளூர்ப் பஞ்சாயத்துக்கள்

24th March 1961] [Sri P. G. Manickam]

அல்லது உள்ளூர் மக்கள் கொடுக்க வேண்டிய நிதி, அந்த வட்டாரம், ஏ, பி, ஸி, டி என்ற வகுப்பில் எந்த வகுப்பில் அடங்குமோ அதைப் பொறுத்திருக்கும் என்று இருக்கிறது. இது மிகவும் யோசிக்கவேண்டிய விஷயம். பொதுஜனங்கள் கொடுக்கிற பணத்தைக்கொண்டு மட்டும்—சாலைகள் ஐந்தாறு மைல்கள் கூட நீளமாக இருக்கலாம். அதைப் போட முடியுமா என்பது யோசிக்கவேண்டும். ஆனால் பஞ்சாயத்துகளுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிற தொகையிலே புது வேலைகள் எடுத்துக்கொள்ளக் கூடாது. குறைந்த வேலைகளோ மற்ற வேலைகளோ செய்வதற்கு இந்தத் தொகையைப் பயன்படுத்தக் கூடாது என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மற்ற ஜில்லா போர்டு ரோடுகள் என்கிறபோது நான்கு பஞ்சாயத்துகளுக்குச் சேர்ந்த பொது வேலைகளாக இருக்கலாம். பஞ்சாயத்து யூனியனிடம் அதைச் செப்பனிடுவதற்குப் பணம் இல்லாமல் இருக்கலாம். லட்சம் ரூபாய்க்கு மேற்பட்டுச் செலவாகக் கூடிய வேலையாக இருந்தால் பணத்திற்கு அவர்கள் என்ன செய்வார்கள் என்பதும் ஆராயவேண்டும். இப்படிப்பட்ட ரோடுகளையே போட முடியாத நிலைமை ஏற்படவிடும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இதற்கு என்ன செய்வது என்பதான குறிப்பு தெளிவாகக் கொடுக்கப்படவில்லை என்பதை நான் மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன். இம்மாதிரி ரோடுகள் சம்பந்தப்பட்டவரை ஒரு குறிப்பிட்ட தொகையை சர்க்காரே போட்டுச் செய்யவேண்டும் என்பதாகத் தெரிவித்துக்கொள்கிறேன். இது சம்பந்தமாக ஜில்லா கலெக்டருக்கு ஒரு உத்தரவு பிறப்பிக்கவேண்டும். சம்பந்தப்பட்ட ஹைவேஸ் அதிகாரிகள் இந்தமாதிரி ரோடுகளை நேரிடையாக எடுத்துச் செய்வதற்குரிய நிலைமையில் சாதகமாக இருக்கும்படி இந்தத் திட்டத்தை சர்க்கார் கவனித்து ஆவன செய்யவேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக தரிசு நிலங்கள். தரிசு நிலங்களில் தற்போது சர்க்கார் இந்தச் சட்டத்தின்கீழ் ஒதுக்கப்படாத காடுகள், மேய்ச்சல் நிலங்கள், வண்டிப்பேட்டைகள், மாட்டுத் தொழுவங்கள், தோப்புகள், சுடுகாடுகள், இடுகாடுகள் போன்ற சிலவகைப் புறம்போக்கு நிலங்களும் பஞ்சாயத்துக்களிடம் நிலைத்துள்ளன. அதோடு தீர்வை விதிக்கப்பட்ட தரிசு நிலங்கள், தீர்வை விதிக்கப்படாத தரிசு நிலங்கள் உட்பட மாநில அரசாங்கத்தாருக்குச் சொந்தமான மற்றவகைப் புறம்போக்கு நிலங்களும் இதரப் பொது நிலங்களும்கூட பஞ்சாயத்தின் உபயோகத்திற்கென கிடைக்கும்படிச் செய்யவேண்டுமென்றும் பலர் எடுத்துச் சொன்னார்கள் என்றும், இவற்றைப் பராதீனம் செய்தல் போன்ற உரிமைகளைப் பஞ்சாயத்துகள் மேற்கொள்ளாத நிலைமையில் இவ்விஷயம் பரிசீலனை செய்யப்படும் என்றும் சர்க்கார் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் ஊர் நத்தம் புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன. அங்கே வீடுகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு சர்க்கார் பாதுகாப்பு அளித்தாகவேண்டும். மீதி இருக்கிற நிலங்களைப் பற்றி ஆட்சேபனை இல்லை. இந்த விஷயத்தில் போதுமான கவனம் செலுத்தப்படவேண்டும்.

மதிய உணவு திட்டத்தைப் பொறுத்த வரையில் கூடிய வரையில் பொது மக்களுடைய உதவியோடு நடத்தப்படுகிறது என்றாலும்—பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து யூனியன்களும், அரசாங்கமும் சேர்ந்து ஒழுங்காக இதைச் செய்வதற்கு வகை செய்யவேண்டும். அதோடு இதுவரையில் ஜில்லா போர்டு உதவி வந்த பிரகாரம் இனி பஞ்சாயத்து யூனியன்கள் புத்தகம், சிலேட் முதலியவைகளை ஹரிஜனங்களுக்கு உதவும் வகையில் சட்டம் திருத்தப்படவேண்டுமென்று தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN: கனம் தலைவர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தச் சமுதாய நலத் திட்டத் துறையை எடுத்துக் கொண்டால் குறிப்பாக சொல்ல வேண்டுமென்றால் இது ஒரு விளம்பர இலாக்கா போன்றுதான் இருக்கிறது. இதற்காக செலவு செய்யக்கூடிய தொகைக்கு ஏற்றவாறு பலன்

கிடைக்கவில்லை என்றுதான் சொல்லவேண்டும். இதைப்பற்றி நான் மாத்திரம் சொல்லவில்லை. இதை ஆராய்ச்சி செய்த மத்திய சர்க்காரில்கூட பலர் கூறியிருக்கிறார்கள். ஏதோ எதிர்க்கட்சிக்காரர்கள் குறைகூற வேண்டுமென்று நினைத்துக் குறைகூறுகிறார்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் நினைக்கலாம். ஏதோ இதில் உள்ள குறைகளை எடுத்துச் சொல்வதற்காகத்தான் இதுபோன்ற விவாதம் இங்கு கொண்டுவருகிறோம். இதைப்பற்றி எதிர்க்கட்சி மாத்திரம் சொல்லவில்லை. காங்கிரஸ் கட்சியில் இருப்பவர்களும் குறைகளை எடுத்துச் சொல்கிறார்கள். காங்கிரஸ் கட்சிக்காரர்கள் இந்த மான்யத்தை ஆதரிக்கிறேன் என்று குறைகளைச் சொல்கிறார்கள். எதிர்க் கட்சிக்காரர்கள் எதிர்க்கிறேன் என்று குறைகளை எடுத்துச் சொல்கிறார்கள். இதுதான் வித்தியாசம்.

இன்றைக்கு பொதுவாக பஞ்சாயத்துக்களோ, பஞ்சாயத்து யூனியன்களோ மூன்றாவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் விவசாய அபிவிருத்தி செய்து உற்பத்தியை அதிகமாகப் பெருக்கவேண்டுமென்று சுருக்கமாக சொன்னார்கள். விவசாய அபிவிருத்தியை எடுத்துக் கொண்டால் இன்றைக்கு பெருமளவிற்கு விவசாய உற்பத்தி அதிகமாக இருக்கிறதா என்று பார்த்தால், இல்லை என்றுதான் சொல்லவேண்டும். காரணம் விவசாயத்திற்கு வேண்டிய அளவிற்கு நீர்ப்பாசன வசதி மிக மிகக் குறைவு. கனம் முதலமைச்சர் அவர்கள் வேலூரில் ஒரு கூட்டத்தில் பேசும்போதுகூட சொன்னார்கள். இந்த பழய மாடுகளையும் ஏறுகளையும் கலப்பைகளையும் வைத்துக் கொண்டு உழுகிறார்கள், இப்பொழுது நவீன கருவிகளையெல்லாம் கொடுத்தும்கூட என்று. ஆனால் இன்றைக்கு பஞ்சாயத்து யூனியன்களுக்கு இதையெல்லாம் கொடுக்கக்கூடிய வசதிகள் இல்லை. அகல உழுவதைவிட ஆழ உழு? 5 தடவை விளையக்கூடிய நிலம் 10 தடவையாக விளையும் என்று சொல்லுகிறார்கள். புல்டோசர், டிராக்டர் கிணறு வெட்டுவதற்கு டிரிலிங் மெஷின் இதுபோன்ற என்னென்ன நவீன கருவிகள் வேண்டுமோ அவைகளைத் தருவிப்பதற்கு அன்னிய நாட்டு செலாவணி கிடையாது. கோதுமை வாங்குவதற்கு மாத்திரம்தான் அன்னிய செலவாணி இருக்கிறது என்கிறார்கள். ஆனால் பெரிய பெரிய முதலாளிகள் மாளிகைகள் கட்டுவதற்காக வேண்டி அவர்களுக்கு உதவி செய்வதற்காக அன்னிய செலாவணி இருக்கும், அதே சமயத்தில் விவசாய அபிவிருத்திக்கு, ஏழை விவசாய மக்களுக்கு உதவி நவீன விவசாயக் கருவிகளை வாங்குவதற்காக அன்னிய செலாவணி இல்லை என்று சொல்லுகிறார்கள்.

**The Hon Sri P. KAKKAN** : கனம் அங்கத்தினர் விவசாயிகளுக்கு வேண்டிய விவசாயக் கருவிகள் இல்லை என்று சொன்னார்கள். ஆனால் இரும்பு கலப்பைப் போன்ற கருவிகள் எல்லாம் விவசாயிகளுக்குக் கொடுத்துவருவது அவர்களுக்குத் தெரியாதா ?

**Sri V. K. KOTHANDARAMAN** : காரணம் எதுவாக இருந்தாலும் விவசாய மக்களுக்குத் தேவையான விவசாயக் கருவிகளை உடனடியாகக் கொடுப்பதற்கு அரசாங்கம் கவனம் செலுத்தவேண்டும். இதுபோன்ற பஞ்சாயத்து யூனியன் ஏரியாவிலுள்ள விவசாயிகளுக்கு லோன் கொடுக்கும் விஷயத்திலும் உடனடியாகக் கொடுப்பதில்லை. மழைகாலம் போனபிறகு தண்ணீர் வற்றிப்போய்விடுகிறது. அந்தசமயத்தில் பணத்தை அவர்களிடம் கொடுத்தால் அதைத் தவறான முறையில் செலவழிக்கக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படுகிறது இதனால் இவர்களுடைய நிலங்களை ஏலம் போடக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஆகையால் விவசாயிகளுக்குத் தேவையிருக்கும்போது உடனடியாக லோன்களை கொடுத்தால் நலமாக இருக்கும் என்று சொல்ல விரும்புகிறேன். இன்று என்ன நடக்கிறதென்றால் பஞ்சாயத்துக்களில் இருக்கும் பெரிய பணக்காரர்கள் அந்த லோன் வசதிகளைப் பெற்றுக் கொண்டு ஏழை விவசாயிகளுக்கு வட்டிக்கு விட்டு பணம் சம்பாதிக்கிறார்கள். இந்தமாதிரியான நிலைமைதான் இதில் இருந்து வருகிறது. இதைத் தவிர விவசாயிகள் குடும்பத்திலே அண்ணன் தம்பிகள்

24th March 1961] [Sri V. K. Kothandaraman]

இருப்பதனால் ஜாயின்ட் பட்டாவாக இருக்கிறது. அதைப் பிரிக்கும்போது சர்வே செய்து நிலத்தை அளக்கவேண்டும், அதனால் காலதாமதம் ஏற்படுகிறது. இதைப்பற்றி பஞ்சாயத்து யூனியன் கூட்டத்திலும் டிஸ்டிரிக்ட் டெவலெப்மென்ட் கூட்டத்திலும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. இதற்கு உருப்படியான நடவடிக்கை ஒன்றும் எடுக்கவில்லை. சர்க்கார் இதை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சாதாரணமாக விவசாயத்தைப்பற்றி தெரிந்த அதிகாரிகள் இருக்கிறார்களா என்று பார்த்தால் கிடையாது. ரெவின்யூ இலாக்காவை எடுத்துக்கொண்டால் வெறும் உப்புக்கல் போட்டமாதிரி சொல்லக்கூடிய அளவிற்கு இருக்கிறதே தவிர விவசாயிகளுக்கு வேண்டிய நன்மையைச் செய்யக்கூடியவைகளாக இல்லை. ஆகையால் விவசாய அனுபவம் உள்ளவர்களைப் போடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இதுபோன்று சோஷியல் வெல்ஃபேர் வொர்க்கர்கள் இருக்கிறார்கள். தயவு செய்து கூடுமானவரை அந்தந்த ஜில்லாவிலே உள்ளவர்களை அந்தந்த ஜில்லாவிலேயே போடவேண்டும். அவர்களை இரண்டு மூன்று ஜில்லாக்களைத் தாண்டிப் போடாமல் அவர்கள் இருக்கும் ஜில்லாவிலேயே போட்டால் சௌகரியமாக இருக்கும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பஞ்சாயத்துக்களுக்கு தரிசு நிலங்கள் இருக்கின்றன. சுடுகாடுகூட பஞ்சாயத்தைச் சேர்ந்ததுதான். கோயம்பத்தூரில் பேரூர் பஞ்சாயத்திலே பல வருஷங்களாக சுடுகாட்டு நிலங்களை சும்மா விட்டுவைத்திருந்தார்கள். பஞ்சாயத்து யூனியன் தலைவர் கம்யூனிஸ்ட் தலைவராக வந்ததினால், அந்த நிலம் தேவஸ்தானத்தைச் சேர்ந்தது அதை காலி செய்யவேண்டுமென்று சொல்லக்கூடிய நிலைமை வந்திருக்கிறது. இதுபோன்று பல இடங்களில் இருப்பதனால் இதை கவனித்து பஞ்சாயத்துக்கு மாற்றுவதற்கு உருப்படியான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மதுக்கரை பஞ்சாயத்தில் இருந்து ரோட்டுகள் போடுவதற்காக பல மகஜர்கள் கொடுக்கப்பட்டன. இதற்கு பல முதலாளிகள் குறுக்கே நிற்கிறார்கள், இதை கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். குறிப்பாக ரோட்டு போடுவதற்காக கிராம மக்களிடமிருந்து 40 ந. பை. கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். குறைந்தது 500 பேர்கள் என்றால் ரூ. 200 தான் ஆகிறது. 1,000 பேர்கள் என்றால் ரூ. 400 தான் ஆகும். ஆகையால், அவர்களுக்கு ரோட்டு போடுவதற்கு உதவ தீவிர நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். விவசாயிகளுக்கு கூடுமானவரைக்கும் நீர்ப்பாசன வசதி செய்துகொடுக்க போதுமான அளவு கவனம் செலுத்தவேண்டும். உரம் தருவதற்கும் நவீன விவசாய கருவிகளைக் கொடுப்பதற்கு ஆவன செய்யவேண்டும். சோஷியல் வெல்ஃபர் செலவுக்கு ஒதுக்கப்பட்ட பணம் அந்தந்த பஞ்சாயத்திற்கு போதுமான அளவு நல்லமுறையில் இயங்குவதற்கு கொடுக்கவேண்டும் இது தவிர 1958-ம் வருஷத்திற்கு முன் பஞ்சாயத்து புறம்போக்கு நிலங்களில் யார் யார் விவசாயம் செய்துக் கொண்டிருந்தாலும், அவர்கள் 10 வருஷ காலம் இருந்தாலும், 20, 30 வருஷகாலமாக இருந்தாலும் அவர்களை உடனடியாக காலி பண்ணச் சொல்லக்கூடிய நிலைமை இருக்கிறது. அதைத் தடுத்து ஏதோ ஒரு வருஷம், இரண்டு வருஷம் இருந்தாலும் சட்டரீதியாக 1958-க்குள் புறம்போக்கு நிலங்களை உபயோகித்துக் கொண்டிருந்த காரணத்தினால் அவர்கள் பேரிலேயே பட்டா வழங்குவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI J. MATHA GOWDER : கனம் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் இந்த ஸ்தல அபிவிருத்தி மான்யக் கோரிக்கையை ஆதரித்து என் கருத்துக்களை கூற விரும்புகின்றேன். முன்பு 360 வட்டாரங்களாக பிரிக்கப் போகிறோம் என்று சொல்லப்பட்டிருந்தது. அதை தற்போது 374 வட்டாரங்களாக பிரிக்கப்பட்டிருப்பது

மிகவும் வரவேற்கத் தக்க அம்சமாகும். திட்டமிட்டதைவிட 14 வட்டாரங்கள் அதிகரிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கும்போது கிராம அபிவிருத்தியில் நமது மாநில சர்க்கார் எவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ளமுடியும். அதே நேரத்தில் இந்தக் குறிப்பில் காணப்படிருக்கக் கூடியது, மலைப் பிரதேசங்களுக்கும், ப்ளெயின்ஸ்க்கும். ஜனத்தொகை அடிப்படையில் விகிதாசாரத்தைப் பிரித்து கொண்டு வரக்கூடிய விதத்தை இந்த மன்றத்தில் நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். உதாரணமாக, 3 வது பக்கத்தில் ஏழாவது பாராவில், "பஞ்சாயத்து யூனியன் சாலைகள் என்று பிரிக்கப்பட்டவற்றை பஞ்சாயத்து யூனியன்கள் பராமரிக்க முடியுமா என்ற சந்தேகம் தோன்றியது என்று சொல்லப்பட்டிருக்கிறது." பஞ்சாயத்து யூனியன்களினால் இப்படிப்பட்ட மாவட்ட வழிகளை பராமரிக்க முடியுமா என்று நாம் சந்தேகிக்கிறோம்........ஆனால் பஞ்சாயத்து யூனியன் சாலைகள் என்று பிரிக்கப்பட்டவற்றிற்கு அவைகளை நிர்வகிக்க பஞ்சாயத்து யூனியன்களுக்கு கணிசமான அளவு தொகை ஒதுக்கப்கபட்டுள்ளது என்று இருப்பதை நான் வரவேற்கிறேன், ஆனால் ஒருவருக்கு 40 நயா பைசா வீதம் என்று கணக்கிட்டுக் கொடுத்தால் 500 ஜனத்தொகை கொண்ட கிராமத்திற்கு, வியாபார ஸ்தலங்களை இந்த கிராமங்களோடு இணைப்பதற்கு சாலைகள் அமைக்க இந்த 40 நயா பைசா வீதம் கொடுத்தால் ரோடுகள் அமைக்க முடியுமா; ப்ளெயின்ஸ் எப்படியோ தெரியாது. ஆனால் மலைப் பிரதேசங்களிலும் இதே கணக்கை வைத்துக்கொண்டு பெர் காப்பிட்டா கணக்குப்படி, ஜனத்தொகை அடிப்படையில் கொடுக்கப்பட்டால் நீலகிரி பிரதேசத்தைப் பொறுத்த வரையில் நான் சொல்லமுடியும், எப்படி இதைக்கொண்டு அங்கு வேலை செய்து முடிக்க முடியும் ? ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் விஷயத்தில் அந்த இலாகாவிலிருந்து, ப்ளெயின்ஸில் வீடு கட்ட வீடு ஒன்றுக்கு 750 ரூபாய் கொடுக்கிறோம். ஆனால் நீலகிரியில் ஒரு வீடு கட்டுவதற்கு 1,000 ரூபாய் கொடுக்கப்படுகிறது. காரணம் அங்கு விலைவாசிகள் அதிகம். மலைப் பிரதேசங்களில் பௌண்டேஷன் போட அதிகச் செலவாகும். ஆக, ஒரு இலாகாவில் மலைப் பிரதேசத்திற்கும் ப்ளெயின்ஸ்க்கும் உள்ள வித்தியாசத்தை வைத்துக்கொண்டு கணக்கிடும்போது மற்ற இலாக்காக்களில் இதுபற்றி பரிசீலனை செய்யாமல் ஜனத்தொகை அடிப்படையில் போட்டு விடுகிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியப் போகிறது நீலகிரியில் பத்து மைல ரோடு போடவேண்டுமென்றால், அதற்காகும் செலவைக் கொண்டு ப்ளெயின்ஸில் 40 மைல் ரோடு போட முடியும். ஆக, இப்படி தொகை ஒதுக்கும்போது மற்ற சமுதாயத் திட்டப் பகுதிகள் முன்னேறிக்கொண்டு போகும்போது, நீலகிரியில் இருக்கக்கூடிய மக்கள் மட்டும் முன்னேற்றம் அடைய முடியாததொரு நிலை ஏற்பட்டிருப்பதை அமைச்சர் அவர்கள் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். நாலு ஆண்டுகளாக இந்த மன்றத்தில் இதைப் பற்றி நான் கூறிக் கொண்டு வந்திருக்கிறேன். அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது தயவு செய்து இதைப் பற்றியதொரு விளக்கம் கொடுத்தால் நான் மிகவும் நன்றியுள்ளவனாக இருப்பேன. அங்கு, எந்தவிதமான வேலையும் செய்யமுடியவில்லை. அங்குள்ள மாவட்ட கழகத்தை எடுத்துக்கொண்டால், சர்க்காரிடம் கடன் கேட்டுக் கொண்டேயிருக்கிறோம். சர்க்காரும் கடன் கொடுத்திருக்கிறார்கள். கடனை நாங்கள் அடைக்க முடியாத நிலைதான் இருக்கிறது. மாவட்டச் சாலைகளை பராமரிக்க எங்களுக்கு பண வசதி போதியதாகயில்லை. ஆறு மாதத்திற்கு இவை வேலை செய்ய, 4,000 ரூபாய் கொடுக்கப்படுகிறது. ஆண்டுக்கு 8,000 ரூபாய். ஆக, 4,000 ரூபாயை வைத்துக்கொண்டு ஒரு ஜில்லாவின் ரோடு வேலைகளை செய்து முடிக்கமுடியுமா ? அதுவும் நீலகிரி ஜில்லாவில், அடிக்கடி நான் சொல்லி வந்திருக்கிறேன். எங்கள் பிராந்தியங்களில் மண் ரோடு அல்லது ஜல்லி ரோடு போட்டால் சர்க்கார் பணமும், மக்கள் பணமும்தான் விரயமாகும் என்று அடிக்கடி கூறியிருக்கிறேன். 10,000 ரூபாயில் மண் அல்லது ஜல்லி ரோடு அமைத்துவிட்டால் நல்ல பலத்த மழை பெய்யும்போது அங்கு அதிகப்படியான ஸ்லோப்ஸ் இருப்பதால் அந்த ரோடுகளை எல்லாம் தண்ணீர் அடித்துக் கொண்டு போய்விடுகிறது. ஆகவே போடப்படுகிற ரோடுகளை தண்ணீர்

24th March 1961] [Sri J. Matha Gowder]

அடித்துக்கொண்டு போகாமல் இருக்க தார் ரோட்ஸ் போடவேண்டும். தார் போடாமல் நீலகிரி ஜில்லாவில ரோடுகளே நிற்காது என்று அடிக்கடி நான் கூறி வந்திருக்கிறேன. தார் போட்டு விட்டீர்களானால் ஒரு முறை போட்டால், அது பத்து ஆண்டுகள் நிற்கும். அதனால் வருடந்தோறும் ஜில்லா போர்ட் செலவு செய்யும ஆயிரக்கணக்கான ரூபாயையும் நாம் மீதம் செயய முடியும். அதில்லாமல் ரோடுகளை பராமரிக்க 500 வேண்டுமென்றால் 5,000 ரூபாய் கொடுத்து, அங்கு நாங்கள் மண்ணையும் தூவி விடுகிறோம். ஒரு நல்ல மழை பெய்தால் அந்த ரோடு தண்ணீரால் அடித்துச் சென்று விடப்படுகிறது. ஆகவே, சர்க்கார் பணம் விரயமாகிறதா இல்லையா? ஆகவே நீலகிரி ஜில்லாவிற்கு ஒரு ஸ்பெஷல் ஸ்கீம் போடவேண்டும். அதை ஒரு மாடல் ஜில்லாவாக வைத்துக் கொள்ளவேண்டும். ரோடு வசதி செய்வதிலாவது அதை ஒரு மாடல் ஜில்லாவாக எடுத்து தார் செயயவேண்டும். இதனால் பணம் விரயமாகப் போயவிடாது. இதை சிந்தித்து நீலகிரியை எப்படியாவது முன்னுக்கு கொண்டுவர வேண்டுமென்ற மனப்பான்மை சர்க்காரிடம் வரவேண்டுமென்று நான் பணிவுடன வேண்டிக்கொள்கிறேன். இங்கு ஒரு குறிப்பு கொடுத்திருக்கிறீர்கள். மாநில அரசாங்கம் மாநில பெரு வழிகள் என்ற முறையில் முக்கியத்துவம் வாய்ந்த சாலைகளின் பராமரிப்பை ஏற்றுக்கொள்ளும் என்று இருக்கிறது. முக்கியத்துவம் வாய்ந்தது என்று சொன்னால் ஒருக்கால் பெரு வழித்துறை அல்லது அதிக போக்குவரத்துள்ள சாலைகளை மட்டும் சர்க்கார் எடுத்துக்கொள்ளும் என்ற மனப்பான்மையில் சொல்லியிருந்தால், நீலகிரியிலும் இரண்டு மூன்று பெரு வழிச் சாலைகள் இருக்கின்றன. காலிக்கட், மேட்டுப்பாளையத்திலிருந்து வருகிற ரோடுகள் போன்று அங்கும் பெரிய ரோடுகள் இருக்கின்றன, ஆனால் கிராமப் புறங்களில் உள்ள முக்கியத்துவம் வாய்ந்த ரோடுகளையும் முக்கியத்துவம் வாய்ந்த ரோடுகள் என்று காரணத்தை காட்டி எடுத்துக்கொண்டால் நிச்சயமாக அந்த ஜில்லா ரோடுகளை நன்கு பராமரிக்க முடியும். அடுத்தபடியாக, கோத்தகிரி வட்டாரத்தைப்பற்றி ஒரு வார்த்தை. கோத்தகிரி வட்டாரத்தை இன்று ஒரு ப்ளாக்காக பிரித்திருக்கிறோம். அங்குள்ள மக்கள் எப்படி இருக்கிறார்கள் என்றால். பிற்பட்ட மக்கள், ஆதிவாசிகள் தவிர வேறு யாரும் இல்லை. வேறு இடங்களில் ஆதிவாசிகள் அதிகமாகவுள்ள இடங்களை, ட்ரைபல் ஏரியாஸ் என்று எடுத்துக்கொள்வதாகக் கேள்விப்பட்டேன். அப்படி எடுத்துக் கொண்டால் அவருக்கு மத்திய அரசாங்க மான்ய, உதவியும் கிடைக்கும். ஆகவே, கோத்தகிரி ஏரியாவை ஒரு ட்ரைபல் ஏரியா என்று நீங்கள் பிரகடனம் செய்யவேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் மார்ச் 31-ம் தேதியோடு முடியப்போகிறது. அப்படி முடியும் தருவாயிலும் கூட இந்த மலைவாசி மக்கள் வாழும் இடங்களில் ரோடு வசதியே கிடைக்கவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே, இந்த கோத்தகிரி வட்டாரத்தை தயவு செய்து அமைச்சர் அவர்கள் ஒரு ட்ரைபல் ஏரியா என்று டிக்ளயர் செய்து, அதை ஒரு ட்ரைபல் ஏரியாவாக எடுத்துக்கொள்ளவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

*SRI R. KRISHNASAMI NAIDU: தலைவர் அவர்களே, கிராம அபிவிருத்தி, ஸ்தல நிர்வாகத்துறை மான்யக் கோரிக்கையின் மீது ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். 1958-ம் வருஷத்திய பஞ்சாயத்து சட்டமும், ஜில்லா அபிவிருத்தி கழகத்தினுடைய சட்டமும் நிறைவேற்றப்பட்டதற்குப் பின்னர் கிராமங்களின் முன்னேற்றத்திற்கு என்று பல வழிவகைகளை அரசாங்கம் வகுத்திருக்கிறது. இந்த இரண்டு வருஷ காலத்தில் அரசாங்கத்தின் தலைமை காரியாலயத்திலுள்ளவர்கள், இந்தத் திட்டத்தை சரிவர நடத்துவத்துவதற்காக மிகவும் பத்தி சிரத்தையோடு முன்னேற்பாடுகளையும் காரியங்களையும் செய்து கொண்டிருக்கிறார்கள். இதை யாரும் பாராட்டாமல் இருக்கமுடியாது. இந்தத் திட்டம் அரசியல் சாசனத்தில் நாம் வகுத்துக்கொண்டுள்ள கொள்கையை நல்லமுறையில் நிறைவேற்றும் வகையிலும், காந்தியடிகள் கருதிய கிராம ராஜ்யம் அமையவேண்டும் என்ற நோக்கத்துடனும் அவர்கள் மிகவும் கணிசமான சிரமத்தை

10–30 a.m.

[Sri R. Krishnasami Naidu] [24th March 1961

எடுத்துக்கொண்டு இந்த காரியங்களை நல்லபடியாக செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் அனைவரும் நேரடியாக, சட்டசபை அங்கத்தினர் என்ற வகையில் அறிந்திருக்கிறோம். அந்த வகையில் ராஜ்ய அளவில் எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள். ஜில்லா அளவிலும், ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியன் அளவிலும், கிராம அளவிலும் செயல்படுவதற்கான காரியங்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. எவ்வளவு தான் பக்தி சிரத்தையோடு காரியங்களை செய்தாலும் பொதுமக்களும் ஸ்தலத்திலுள்ள நிர்வாக அதிகாரிகளும் ஒரே மனப்பான்மையுடன் ஒத்துழைத்து விஷயங்களை சரிவர பகிர்ந்து கொண்டு திட்டங்களை நன்றாக தெரிந்து கொண்டு இந்தத் திட்டங்கள் யாருடைய நன்மைக்காக செய்யப்பட்டிருக்கின்றன, இதனால் ஏற்படும் நன்மைகள் என்ன, இதனுடைய பலனை யார் அடைவார்கள் என்பதை எல்லாம் தெரிந்துகொண்டு இந்தத் திட்டத்தில் ஒத்துழைத்தால் இந்தத் திட்டம் சரிவர நிறைவேறும் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்கமுடியாது. இந்தத் திட்டத்தின் மூலம் ஏற்படுகின்ற புதிய பணிகளை அரசாங்க சிப்பந்திகளானாலும் சரி, பொது மக்களானாலும் சரி, இவைகளை நன்றாகப் புரிந்து கொள்வதில் ஆரம்பத்தில் பல கஷ்டங்கள் ஏற்படத்தான் செய்கின்றன. அதற்குத் தகுந்த மனப்பான்மை எல்லோரும் வகுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது, இந்த விஷயங்களை தெரிந்து கொள்வதில் இவர்களுடைய போக்கு நல்ல வகையில் செயல்பட வேண்டியிருக்கிறது. அதற்குத் தகுந்த வழியில் அவர்களுடைய மனதையும் சரிப்படுத்திக்கொள்வது சற்று கஷ்டமான காரியம் என்பதை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ளவேண்டும். ஆரம்பகாலத்தில் பிரத்யட்சமாக என்னென்ன கஷ்டங்கள் ஏற்படும் என்பதை நாம் நன்றாக அறிந்துக்கொண்டிருக்கிறோம். அரசாங்கமும் இந்தத் துறையில் ஈடுபட்டுள்ள அதிகாரிகளும் காரியங்களை செய்து கொண்டு வரும்போது ஆங்காங்கு பணிகளை நிறைவேற்றும் வகையில் நம்மை எதிர்நோக்கியுள்ள பல வேறு பிரச்னைகள் வரும்போது, அதை அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வரவேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். இதில் நம்மை எதிர்நோக்கியிருக்கின்ற பல்வேறு பிரச்னைகளைப்பற்றி அவ்வப்போது அரசாங்கத்திற்கு தெரிவிக்கவேண்டும் என்று அவர்கள் நம்மை கேட்கின்றார்கள். அதன் காரணமாக பல பிரச்னைகளை நாம் அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டுவரவேண்டியது அவசியமாகிறது. ஆளும்கட்சியின் பக்கத்திலிருந்து பேசுகின்ற அங்கத்தினர்களும், எல்லாவற்றையும் ஆதரித்துக் கொண்டு அவர்களும் குறைகளைத்தான் எடுத்துக் கூறிவருகிறார்கள் என்று ஒரு அன்பர் இங்கு குறிப்பிட்டார்கள். கல்யாணம் நடைபெறவேண்டும், அதுவும் சிறப்பாக நடைபெறவேண்டும். கல்யாணம் சிறப்பாக நடப்பதற்கு என்னென்ன ஏற்பாடுகளை. எந்தெந்த காரியங்கள் சரியாக செய்ய வேண்டுமோ அவைகளை செய்துக்கொடுத்தால் கல்யாணம் சிறப்பாக நடைபெறும். அந்த நன்னோக்கத்துடன் நாங்கள் குறைகளை எடுத்துகாட்டுகிறோம். ஆனால் இழவு வீடாக ஆக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு குறைகளை சொன்னால் இரண்டும் ஒன்றாகாது. ஆட்சியினர் தரப்பில் கருத்துக்களை சொல்லும்போது, காரியங்களை நிறைவேற்றும்போது அவ்வப்போது எதிர்நோக்குகின்ற பல பிரச்னைகளுக்கு பரிகாரம் தேடும் வகையில் அவ்வப்போது ஏற்படும் நிலைமைகளை அரசாங்கத்தில் எடுத்துக்கூற வேண்டியிருக்கிறது ஆகையினால் அரசாங்கத்தின் தரப்பில் கூறப்படும் கருத்துக்களும், வேறு பல விதமான நோக்கங்களைக்கொண்டு சொல்லப்படும் எதிர் கருத்துக்களும். அல்லது அவ்விதம் கூறப்படும் குறைகளும் ஒன்று என்ற வகையில் சொல்லுவது சரியல்ல. வெண்ணெய்க்கும் சுண்ணாம்புக்கும் வித்தியாசம் இருக்கிறது என்பதை யாரும் மறந்து விடமுடியாது. அந்த அளவில் தான் ஆளும்கட்சி பக்கத்திலுள்ளவர்கள் எடுத்துக் கூறுகிறார்கள். எங்கள் மனதில் பல்வேறு பிரச்னைகள் காரியங்களில் வரும்போது அவைகளை நிவர்த்தி செய்வதற்கு என்ன வழி என்பதைப்பற்றி நாங்கள் ஆலோசிக்கிறோம். அதற்காக நாங்கள் கவலைப்படுகிறோம். வருத்தப்படுகிறோம், ஒவ்வொரு காரியங்களை நிறைவேற்றும் போதும், அதில் ஏற்படும் மனப்பாங்கின் காரணமாக பல முரண்பாடுகள் ஏற்படுகின்றன. அதை தீர்த்துவைக்கின்றவகையில் அரசாங்க சிப்பந்திகளும், பொதுமக்களும் ஒத்துழைக்கவேண்டும் என்று நாங்கள் ஆசைப்படுகிறோம். அவ்விதமான சூழ்நிலை ஏற்படவேண்டும் என்று நாங்கள்

24th March 1961] [Sri R. Krishnasami Naidu]

எண்ணுகின்ற நேரத்தில் அதற்காக நாங்கள் பாடுபடுகிறோம், அவ்விதமான சூழ்நிலை ஏற்படாத போதெல்லாம் நாங்கள் வருத்தப்படுகிறோம். அம்மாதிரியான பிரச்னைகளில் சிரத்தை காட்டுகிறோம். இம்மாதிரி விஷயங்களில் கவலைகள் இருப்பதை நாங்கள் பகிரங்கமாக ஒப்புக்கொள்கிறோம், இனிமேலும் ஒப்புக்கொள்ளத் தயாராய் இருக்கிறோம். ஆனால் இம்மாதிரியான காரியங்களை அல்லது சட்டங்களை செயல்படுத்தும்போது பல்வேறு குறைகள் ஏற்படுவதை நாங்கள் சொல்லிக்கொண்டிருக்கிறோம். இவ்விதம் ஒரு சில வார்த்தைகளை ஆரம்பத்தில் கூறிக்கொண்டு, முக்கியமாக இந்தத் திட்டம் நல்லமுறையில் நிறைவேறும் வகையில் விஷயங்களை எடுத்துக் கூறி வருகிறோம். அந்த முறையில் ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். அரசாங்கத்தின் கையில் இருக்கின்ற புறம்போக்கு நிலங்கள், நத்தம் புறம்போக்குகள், மயானங்கள், புறம்போக்கு மரங்களை ஏலத்தில் விடுதல், மீன் குத்தகை விடுதல் போன்றவைகளை பஞ்சாயத்துக்களுக்கு கொடுத்திருக்கிறோம். இவைகள் எல்லாம் பல இடங்களிலும் ஒழுங்காக நடைபெற்றுவருகின்றன. இருந்தாலும் ஒரு சில இடங்களில் ரெவின்யூ அதிகாரிகள், ஸ்தலத்திலுள்ள அதிகாரிகள் இன்னும் அரசாங்கத்தினுடைய பாத்தியதைகள் எல்லாம் எவ்விதம் ஒப்படைப்பது, இவைகளை எல்லாம் பஞ்சாயத்துகள் எவ்விதம் எடுத்துக் கொள்வது என்பதற்கெல்லாம் திட்டவட்டமான உத்தரவுகள் சில இடங்களில் இல்லை என்று கூறப்படுகிறது. இவ்வாறு இருக்கக்கூடிய பிரச்னைகளை ராஜ்ய அளவில் எடுத்துக்காட்டப்படுகின்றன. இதைப்பற்றி விரிவாக இந்த மன்றத்தில் எடுத்துக்கூற வேண்டிய தேவையில்லை. அரசாங்கத்திற்கு இவைகளைப் பற்றி எத்தனையோ தடவைகள் சொல்லப்பட்டிருக்கின்றன என்று நினைக்கிறேன். இதற்கான பரிகாரங்களையும் அரசாங்கம் செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். ஆனால் கிராமங்கள் அளவில், பஞ்சாயத்து அளவில் இந்தப் பிரச்னைகள் வரும்போது, அங்கேயிருக்கக்கூடிய ரெவின்யூ அதிகாரிகளிடையேயும், புதிதாக வருகின்றவர்களிடையேயும் அபிப்பிராய பேதங்கள் எழுகின்றன, கருத்து மோதல் ஏற்படுகின்றன. ஆகவே அதிகாரம் சம்பந்தப்பட்டவரை யார் யாருக்கு எந்த எந்த வகையில் அதிகாரங்கள் இருக்கின்றன என்பதை உத்தரவுகள் மூலம் தெளிவாக்கவேண்டியது மிக மிக அவசியமாகும். இன்னொன்றையும் கூற விரும்புகிறேன். ரெவின்யூ இலாகா சம்பந்தப்பட்ட மட்டில், கிராம அதிகாரிகள், தாலுகா அளவில் இருக்கக்கூடிய ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பல குமாஸ்தாக்கள், ரெவின்யூ இலாகா சிப்பந்திகள் சம்பந்தப்பட்ட மட்டில் அரசாங்கத்திலிருந்து பஞ்சாயத்துகளுக்கு பிரித்து கொடுக்கப்பட்டிருக்கும் திட்டங்கள் எவ்விதம் நடைபெறுகிறது, பார்ப்போம் என்கின்ற அளவில் வேடிக்கைப் பார்க்கிற மாதிரி சில சமயங்களில் எனக்கு தோன்றுகிறது அவர்களுடைய நடவடிக்கைகள் இப்போது கொடுக்கப்படும் அதிகாரங்கள் ஏதோ அவர்களிடமிருந்து யாருக்கோ பறிபோகிறது என்கின்ற எண்ணத்தில், இவர்கள் நிர்வாகத்தை நடத்த முடியுமா என்று வேடிக்கை பார்க்கின்ற அளவில் இருக்கிறது என்று நினைக்கிறேன். கலெக்டர் அளவில் இப்போது பொறுப்புகள் எவ்வளவோ குறைந்து கொண்டு வருகின்றன. ஒவ்வொரு ஜில்லாக் கலெக்டரும் அந்தந்த ஜில்லாக்களில் இருக்கக் கூடிய பஞ்சாயத்துகள் சம்பந்தமாக அதிகாரங்களை வரையறுத்துக் கொடுத்து, அவைகள் எல்லாம் நல்ல முறையில் செயல்படும் படியான அளவில், சரிவர சிரத்தையோடு கவனம் செலுத்தி அந்தந்த சமயங்களில் கண்டிப்பான உத்தரவுகள் போட்டு, அவைகள் எல்லாம் சரியான முறையில் நிறைவேற்றப்படுகின்றனவா என்பதையும் மேற்பார்வை செய்யவேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அதோடு இன்னும் முக்கியமாக இருக்கின்ற ஒன்றிரண்டு விஷயங்களை தெரிவித்துக் கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

இன்னொன்று எ. பி. வி. டி. என்று பஞ்சாயத்து யூனியன் பிரிக்கப் படுகின்றன. ரோடுகளைப்பற்றி நேற்றைய தினம் பிரஸ்தாபிக்கப்பட்டது. ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும் கிட்டத் தட்ட 70-75 ஆயிரம் ஜனத் தொகை இருக்கிறது. 25,000 அல்லது 30,000 ரூபாய் வரையில் இந்த ரோடுகளைப் பராமரிப்பதற்காக தலைக்கு 40 நயா பைசா வீதம் கிடைக்கிறது. எங்கள் பகுதியில் எடுத்துக்கொண்டால் ஒரு பஞ்சாயத்துக்கு 33

[Sri R. Krishnasami Naidu] [24th March 1961

மைல் நீள ரோடுகள் இருக்கின்றன ; இன்னொரு பஞ்சாயத்துக்கு 30 மைல் நீள ரோடுகள் இருக்கின்றன ; இன்னொரு பஞ்சாயத்துக்கு 22 மைல் நீள ரோடுகள் இருக்கின்றன. இந்த ரூபாயை வைத்துக்கொண்டு இந்த ரோடுகளைப் பராமரிப்பது கஷ்டம். அதைத் தவிர கிராம ரோடுகள் இருக்கின்றன. இவைகளைப் பராமரிக்க வேறு வழிவகை காணவேண்டும். அதர் டிஸ்ட்ரிக்ட் ரோட்ஸ் பஞ்சாயத்து யூனியனிடம் விடப்பட்டிருக்கின்றன. இவைகளைச் சரிவர பராமரிக்க நிதி நிலை போதாது என்பது தெரிந்த விஷயம். கூடுமான வரையில் பஞ்சாயத்து யூனியனிடம் விடப்பட்டிருக்கிற ஒரு "அதர் டிஸ்ட்ரிக்ட் ரோட்ஸ்"-ஐ அரசாங்கமே ஒவ்வொரு வருஷமும் திட்டமிட்டு ஒரு மைலுக்குக் குறைந்த ரோடுகளை பஞ்சாயத்து யூனியனுக்கு விட்டு விட்டு, அதிக நீளமுள்ள ரோடுகளை, எதிர்காலத்தில் பஸ்கள் விடக் கூடிய ரோடுகளை அரசாங்கமே எடுத்துக்கொள்ளும் ஏற்பாடுகளை ராஜ்ய அளவில் திட்டமிட்டு அதிகமாக ரோடுகளை எடுத்துக்கொள்ளவேண்டும். இப்போதுள்ள 500 மைல் 600 மைல் எடுத்துக்கொள்ளும் நிலைமை மாறி, பஞ்சாயத்து யூனியன் பொறுப்பிலிருந்து அதிக ரோடுகளை எடுத்துக்கொண்டால் இதன் மூலமாக நன்மை ஏற்படும் வகையில் காரியங்களைச் செய்ய வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

* DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN : சபை உதவித் தலைவர் அவர்களே, நம்முடைய சமுதாய நலத் திட்டத்தைப்போல நல்ல கருவி கிராம முன்னேற்றத்திற்கு இருக்கவே முடியாது. கிராம பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியனும் வந்தபிறகு செயலாற்றவேண்டிய நல்ல யந்திரமும் அவர்கள் கையில் கொடுத்திருக்கிறார்கள். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலே பல பல திட்டங்கள், சிறியதும் பெரியதும் ஆன திட்டங்கள் வரும்போது அட்மினிஸ்ட்ரேட்டிவ் செட்-அப் எந்த மாதிரி இருக்கவேண்டும் எந்த மாதிரியான நிர்வாகிகள் அதில் செயல்பட வேண்டும் என்று பார்த்தால் தயவு தாட்சண்யம் இல்லாமல் நல்ல முறையில் செயலாற்றும் திறமையுடையவர்களைத் தேர்ந்தெடுப்பது மிக மிக அவசியமாகிறது. ஒரு நல்ல கூர்மையான கத்தி ஒரு நல்ல டாக்டர் கையில் கிடைத்தால் எப்பேர்ப்பட்ட கஷ்டமான ஆபரேஷனையும் செய்யலாம் அதனால் நோயாளி சுகமாக முடியும். ஆனால் அது தகுதியற்றவர் கையில் கிடைத்தால் யாரையாவது கொல்லவும் ஒரு சாதனமாக ஆகும். அதேபோல நம் சமுதாய நலத திட்டத்திற்காக பிளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர்களையும் எக்ஸ்டென்ஷன் ஆபீஸர்களையும் தேர்ந்தெடுக்கும்போது அவர்கள் துறையில் கெட்டிக்காரர்களாக இருந்தால் மட்டும் போதாது, மற்றும் விவசாயத் துறை, தொழில் துறைபோல துறையில் கெட்டிக்காரர்களாக இருந்து, கிராமப் பணி என்ற முறையில் செயலாற்றும் மனப்பான்மையும் அதோடு திறமையும் இருக்கவேண்டும் என்பதை மறுக்க முடியாது. அவ்வளவு நல்ல சூழ்நிலையும், ஜனங்களுடைய ஒத்துழைப்பும் இருந்தாலும் அடிக்கடி இந்த நிர்வாகிகளை மாற்றுவதன் மூலமாக நல்ல சமுதாய வளர்ச்சியில் உள்ள பிளாக்குகளும் உண்மையில் குட்டிச்சுவராக மாறி இருக்கின்றன என்று சொல்லலாம். புதிதாக பிளாக்குகள் வரும்போது நல்லவர்களாகத் தேர்ந்தெடுத்து நியமனம் செய்யவேண்டும். அவர்கள் ஒரே இடத்தில் 3, 4 ஆண்டுகள் பணியாற்றி நல்ல பலனை காணச் செய்யவேண்டும் என்பதோடுகூட, அதில் கவனம் செலுத்துவதோடுகூட நம்மைப் போன்றவர்கள் சிறு சிறு குறைகளைப் பெரிதாகச் செய்து நிர்வாகிகளுக்கு கஷ்டம் கொடுக்காமல், பொது ஜனங்களின் ஒத்துழைப்பையும் வாங்கிக் கொடுத்து இரு தரப்பிலும் ஒத்துழைப்போமானால் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம் சமுதாய நலத திட்டம் எவ்வளவு வளர்ச்சி பெறுகிறது என்று பார்க்கலாம். இந்த வகையில் எல்லோரும் பரிபூர்ணமாக ஒத்துழைக்க வேண்டும்.

அடுத்தபடியாக பஞ்சாயத்துக்களில் ஒரு ஸ்திரீ மெம்பர் இல்லாது போனால் ஒரு ஸ்திரீயை கோ-ஆப்ட் செய்யலாம் என்று இருக்கிறது. அதை வரவேற்றாலும்கூட, இது போதாது. சிறு சிறு கிராமங்களில் நிச்சயமாக ஒரு பெண் மட்டும் வந்து பஞ்சாயத்திலே அமர மாட்டாள். அங்கத்தினராகப் போட்டாலும் கூட்டங்களுக்கு வராத நிலைமை வரும். கிராமங்களில் விவரம் தெரிந்த பெண்கள், படித்த பெண்கள், ஆசிரியைகள

24th March 1961]

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

கிடைப்பார்கள். ஆகவே ஒரு மெம்பர் எலெக்ஷன் ஆகியிருந்தால் இன்னொரு பெண் மெம்பரைப் போடவேண்டும். அல்லது ஒருவர்கூட எலெக்ஷனாகவில்லை என்றால் இரண்டு பெண் அங்கத்தினர்களை கோ-ஆப்ட் செய்ய வேண்டும். ஏனென்றால் இன்றைய தினம் பஞ்சாயத்துப் பூசலில் பெண்களுக்கு இடம் கொடுப்பதும் இல்லை. போட்டியிட்டு வாங்கிக்கொள்ளும் சக்தியும் இன்னும் வரவில்லை. ஆகவே ஒவ்வொரு பஞ்சாயத்திலும் இரண்டு பெண்கள் இருக்கவேண்டும். பெண்கள், குழந்தைகள் இவர்கள் சம்பநதப்பட்ட முன்னேறற வேலைகளை கவனிப்பதற்காக இந்த பெண் அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு ஸ்டாண்டிங் கமிட்டி போட்டு அந்தக் கமிட்டியிடம் கொடுக்கப்பட்டால், பஞ்சாயதகின் நிர்வாகத்திற்கு உட்பட்டு இந்தக் குழு செயலாற்றவேண்டும் என்று ஒரு திட்டத்தை தீவிரமாக செயல்படுத்த வேண்டும்.

மேலும் ஒரு மெம்பர் குறிப்பிட்டார். சோஷியல் வெல்ஃபேர் போர்டு மூலமாக நிறைவேறும் திட்டங்கள் எந்தக் காரணங்களினாலோ தடைபட்டாலும் சரி பஞ்சாயத்து யூனியன் மூலமாக எல்லா வேலைகளையும் மிகத் திறம்படச் செய்ய முடியும் என்று நம்புவோர்களில் நானும் ஒருத்தி. பஞ்சாயத்து யூனியனை விட்டு விடாமல் பஞ்சாயத்து யூனியன் தலைவரையும், நல்ல சமூக ஊழியர்களையும் பெண்கள் வேலையில் திறம்பட வேலை செய்யக் கூடிய பிளாக் மெம்பர்களையும், விமென்ஸ் எக்ஸ்டென்ஷன் ப்ரொக்ராம் கமிட்டி என்று இருப்பதைக் கொண்டு ஒன்றிரண்டு மெம்பர்கள் இருந்தால் அவர்களையும் சேர்த்து விமென்ஸ் வெல்ஃபேர் கமிட்டி, சோஷியல் வெல்ஃபேர் போர்டு, சமூக வேலை செய்யக் கூடிய ஸ்தாபனங்கள் எல்லாம் சேர்ந்து இணைந்த ஒரு குழுவாக அமைத்து அவர்களிடம் ஒப்படைக்க வேண்டும்.

(Deputy Speaker in the Chair.)

சமுதாய நலத்தை கவனிப்பதிலே பெண்களுக்கு நல்ல ஊக்கம் கொடுத்தால் அவர்கள் மூலமாக எல்லா துறைகளிலும், பொருளாதாரத் துறை உட்பட வேலை செய்ய முடியும். அதற்கு வேண்டிய உததிரவை சீக்கிரம் பிறப்பித்தால், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கப்படுகிற இந்த நாளில தீவிரமாக வேலை செய்ய முடியும்.

பஞ்சாயத்து யூனியனுக்கு வரும்போது பஞ்சாயத்து தலைவர்கள்கொண்ட கவுன்ஸில் அது. வட்டாரத்தில் வேறு ஸ்தாபனங்கள் வேலை செய்து கொண்டிருக்கிறது. அவைகளை எந்த விதத்தில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று திட்டம் வகுத்தால் நலமாக இருக்கும்.

அடுத்தபடியாக இந்த எஸ்.ஈ.ஓ.-க்களை எடுத்துக்கொண்டால் ஒரு ஆண் ஒரு பெண் இருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமை ஒரு திரிசங்கு சொர்க்கமாக இருக்கிறது. அவர்கள் கல்வி இலாகாவில் ஏற்றுக்கொள்ளப் படவில்லை. முதியோர் கல்விக்கு முன்போல் வாய்ப்பு இருப்பதாகத் தெரியவில்லை. அவர்களுடைய நிலைமை என்ன என்று வரையறுக்கப்பட வேண்டும். பெண்களின் தரத்தை உயர்த்துவது, மதிய உணவு போன்ற குறிப்பிட்ட வேலைகளை அவர்களுக்குக் கொடுக்கவேண்டும். முக்கிய வேலைகளை பெண் சேவகிக்கு ஒதுக்கி போதுமான கிராம சேவக்குகள் போட்டு போதுமான அளவு வேலை செய்ய வாய்ப்புக் கொடுக்கவேண்டும். அதிலும் சிக்கிரமாக தீர்மானம் எடுக்கவேண்டுமென்று சொலலிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம். ஹரிஜனங்கள் வேலை இருக்கிறது. ஸ்காலர்ஷிப் கொடுப்பதில் குறைபாடுகள் இருக்கின்றன என்றெல்லாம் சொன்னார்கள். ஒரு ப்ளாக்கில் ஒரு ஹை ஸ்கூல் இருக்கலாம். ஹைஸ்கூலில் ஸ்காலர்ஷிப் கொடுப்பதில் இன்றைக்கு பொறுப்புள்ள தலைவர் அந்த இடத்தில் இருக்கிறார்கள். எம்.எல.ஏ.-க்கள் இருக்கிறார்கள். பஞ்சாயத்து கவுன்ஸில் மூலமாக பள்ளி மான்யம் கொடுப்பதை மாற்றிக் கொடுக்கலாம். ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டும் பணியையும் இவர்களே செய்யலாம் என்றால் அவரவர் ஊருக்குச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் நன்றாகச் செயல்படக்கூடும்.

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

ஜில்லாவாரியாகப் பிரித்துக் கொடுத்து துரிதப்படுத்தவேண்டுமென்று சொன்னார்கள். இன்னும் எல்லாவற்றையும் இங்கிருந்து கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். அம்மாதிரி பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று சொல்லுவதோடு மதிய உணவு மான்யத்தையும் பஞ்சாயத்து மூலமாகவே ஏற்பாடு செய்து நடத்தினால் உபாத்தியாயர்களை நிர்ப்பந்தப் படுத்தி வசூல் செய்கிறார்கள் என்ற குறைபாடுகள் வராமல் அந்தந்த ஊர்களில் நல்ல விதத்தில் மதிய உணவுத் திட்டம் நடைபெற வசதியாக இருக்கும். பஞ்சாயத்து யூனியனில் வேலை வாய்ப்புக்கு வசதி செய்து கொடுக்கவேண்டும். நல்ல திட்டமிட்டுச் செய்வதற்கு ஒன்றிரண்டு மாதிரி வட்டாரங்களில் தொழில்கள் கொடுப்பதன் மூலம் அவர்களுக்கு ஒரு நிரந்தரமான வேலை வாய்ப்புத் தர என்ன செய்யலாம் என்று பார்க்க வேண்டும். ஒவ்வொரு பிளாக்கிற்கும் ஒரு தொழிற் கல்விச்சாலை என்று சொல்லும்போது பாலிடெக்னிக் வேண்டுமென்று சொல்லவில்லை. சர்வீஸ் சென்டர்கள் போன்றவைகளை வைத்து, அதிலே ஒவ்வொருவருடைய சௌகரியத்தை உத்தேசித்து பயிற்சி கொடுத்து, அவர்களுக்கு ஒரு கூட்டுறவு சொஸைடி ஏற்படுத்திக் கொடுத்தால் மிகவும் வசதியாக இருக்கும்.

குடும்ப நலனைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். இப்போது குடும்பக் கட்டுப்பாடு என்பதற்காக பிரசாரம் செய்கிறோம். இதுபற்றி பல உத்திரவுகள் போட்டாலும், அவர்களுக்கு இந்த இந்த மாதிரி என்னென்ன செய்யலாம் என்று சொல்லக்கூடிய கருத்துக்களை அறியும்படிச் செய்யவேண்டும். அந்த அளவிலே இப்போது பஞ்சாயத்து யூனியன்களிலே இருக்கக்கூடிய மெம்பர்களுக்கோ, தலைவர்களுக்கோ அல்லது பிளாக்கில் வேலை செய்யக்கூடியவர்களுக்கோ எடுத்துச் சொல்வதற்குத் தெரியாது. முதலிலே அவர்களுக்கே என்ன செய்யவேண்டுமென்று தெரியாது. இதை வழக்கத்திலே அவர்கள் எந்த அளவிலே புரிந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை அங்குள்ள அதிகாரிகள் முதல் கடைசியில் உள்ளவர்கள் வரை பேசிப் பார்த்தால்தான் தெரியும். அவர்களிடையே ஒரு தவறான அபிபிராயம்தான் இருந்து வருகிறது. அவர்களைத்தான் ஒவ்வொரு கிராமத்திலே இருக்கக்கூடியவர்களும் போய்க்கேட்கிறார்கள். ஆகவே, நாம் அவர்களுக்கு முதலில் இதற்கான கல்விப் பிரசாரத்தை அளிக்கவேண்டும். ஜனத்தொகை கட்டுப்பாடு செய்வதால் நமக்கு அது எந்தெந்த முறைகளிலே உதவுகிறது என்பதை நல்ல முறையில் தெளிவாக்குவதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**Sri M. SELVARAJ :** மதிப்பிற்குரிய துணைத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் கிராம அபிவிருத்தி, ஸ்தல நிர்வாகத் துறையின்கீழ் கொடுக்கப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒருசில கருத்துக்கள் கூற விரும்புகிறேன். குறிப்பாக, இப்போது பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் பரவலாக அமைக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இதிலே அதன் தலைவருக்கு என்ன அதிகாரம் இருக்கிறது, கமிஷனருக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்ற ஒரு பெரிய சர்ச்சை இருந்து கொண்டிருக்கிறது. அவைகளையெல்லாம் கவனித்து, இப்படி ஏற்படக்கூடிய சிக்கல்களுக்குத் தகுந்த முறையில் விதிகளைப் பிறப்பிக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இப்போது பிளாக்குகளை ஏ.பீ.சி.டி. என்ற முறையிலே பிரிப்பதாகத் தீர்மானித்திருக்கிறோம். எதையும் அங்குள்ள மாவட்டக் கலெக்டரும், அபிவிருத்திக் குழுவும் சேர்ந்து அதை ஆலோசனை செய்து பார்க்க வேண்டுமென்று இதிலே குறிப்பிட்டிருக்கிறது ஆனால் அந்த பிளாக்குகளைப் பார்க்கின்றபோது, அந்த வட்டாரத்தில் குறிப்பாக ஒரு பிளாக்கை எடுத்துக்கொண்டால், ஒரு பிர்க்காவில் கிட்டத்தட்ட 20, 30 கிராமங்கள் நஞ்சைப் பகுதியாகவும், பாக்கியுள்ள 40, 50, கிராமங்கள் புஞ்சைப் பகுதியாகவும் கூடிய நீர்ப்பாசன வசதியோடு இருக்கிறதென்றால், இப்பேர்ப்பட்ட பிளாக்குகளை பார்க்கின்றபோது குறைந்தது 'சி' என்ற அளவிலே அதைப் பார்த்து, அவர்களுக்கு வேண்டிய உதவிகளை அந்த வட்டாரக் கவுன்சிலும், மாவட்டக் கலெக்டரும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், என்னுடைய தொகுதிக்கு அதாவது

24th March 1961] [Sri M. Selvaraj]

விருத்தாசலத்தில் நல்லூர் பிளாக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதிலே பெண்ணாடம் பிர்க்காவை 'ஏ' பிளாக்காகப் பிரித்திருக்கிறார்கள். இதை எப்படி பிரித்தார்கள் என்று தெரியவில்லை. ஆகவே இவைகளை யெல்லாம் கவனித்து, அதற்காவன செய்யவேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக் கொள்கிறேன். மேலும் பஞ்சாயத்துக் ளிடத்தில் பொதுச் சொத்துக்கள், அதாவது மேய்ச்சல் நிலங்கள், கிராமப் பகுதிகளிலே உள்ள தோப்பு துறவுகள், இடுகாடுகள் போன்றவைகளை ஒப்படைப்பதற்கான ஏற்பாடுகள் செய்வதற்கு நாங்கள் கவனித்துக் கொண்டு வருகிறோம் என்ற முறையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். இதையும் அவர்கள் உடனடியாக அந்த வட்டாரத்திலுள்ள கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு ஒதுக்க வேண்டுமென்று இந்த நேரத்திலே கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

முன்பு கிராமப் பஞ்சாயத்துக்களிலே வேலை செய்துகொண்டிருந்த குளுப் ஊழியர்கள் ஆகியோரை இப்போது கிராமத்திலுள்ள கர்ணம், மணியக் காரர்கள் ஆகியோரை எப்படி செயலாளராகப் போட்டு வரி வசூலிக்க அனுமதிக்கப்படுகிறதோ, அதைப்போல் இவர்களையும் இந்த யூனியன்களிலே எடுத்துக்கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று இந்த நேரத்திலே கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

மேலும் இப்போது பிளாக்குகள் அடிப்படையில் பார்க்கின்றபோது, குடிதண்ணீர் திட்டத்திற்கு 25 சதவிகிதம் கண்ட்ரிபியூஷனாக மக்கள் தொகை கொடுக்கவேண்டுமென்று விதி இருக்கிறது. ஆனால் அந்த விதியானது தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், பிற்போக்கான நிலைமையிலே இருக்கின்ற பிற்பட்ட மக்களுக்கும் கிடையாது என்ற நிலைமை இப்போது இருக்கிறது. என்னுடைய மாவட்டத்தைப் பொறுத்தவரையில் தாழ்த்தப் பட்ட மக்கள் வசிக்கின்ற பகுதியில் மக்கள் கொடுக்கும் தொகை வாங்கப் படாமல், பூராத தொகையையும் சர்க்கார் செலவு செய்திருக்கிறார்கள். ஆனால் பிற்பட்ட மக்கள் வசிக்கின்ற பகுதியில் குடிதண்ணீர் வசதிவேண்டு மென்றால், 25 சதவிகிதம் அதற்குப் பங்குத் தொகையாக கிராம மக்கள் கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். விருத்தாசலத்தை எடுத்துக் கொண்டால், விருத்தாசலத்திற்கு சமீபத்திலே தொழார் என்ற கிராமம் இருக்கிறது. அதிலே 3,000 பேர்கள் வசிக்கிறார்கள். அங்கு குடிதண்ணீர் கொண்டு வரவேண்டுமென்று கிட்டத்தட்ட 3 ஆண்டு காலமாக முயற்சித்து பஞ்சாயத்து போர்டு 2,000 ரூபாய் கட்டியிருக்கிறார்கள். ஆனால் மக்கள் தங்கள் பங்குத் தொகையைக் கொடுக்கவில்லை, அதற்குக் காரணம் அங்குள்ள மக்கள் மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக் கிறார்கள். அவர்கள் நாங்கள் தான் பஞ்சாயத்துக்கு வரி கட்டுகிறோமே, அதனால் மக்கள் தொகையாகப் பணம் எங்களால் கொடுக்க முடியாது என்று கூறுகிறார்கள். இப்படிப் பல முறை அந்த மாவட்டக் கலெக்டர், மற்றும் பிற அதிகாரிகள் ஆகியோரை வைத்துக்கொண்டு கேட்டதற்கும் அவர்கள் பங்குத் தொகையைக் கொடுக்க மறுத்திருக்கிறார்கள். ஆனால் அதே பஞ்சாயத்திற்கு நிதி நிறைய இருக்கிறது. அந்தப் பஞ்சாயத்தில் ரூபாய் 10,000-க்கும் அதிகமாக நிதி இருக்கிறது. அப்படி பஞ்சாயத்துக் களுக்கு நிறைய நிதி இருக்குமானால், அந்தப் பஞ்சாயத்துக்களே மக்கள் தொகையையும் சேர்த்துக் கட்டி அதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்வதற்கு விதி அமைக்கப்பட வேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அதேபோன்று பள்ளிக்கூடங்கள் கட்டுவதற்கும் 25 சதவிகிதம் பங்குத் தொகை கட்ட வேண்டுமென்று இருக்கிறது. அதையும் மாற்றியமைக்க வேண்டும். ஏனென்றால், இப்பொழுது கிராமத்திலுள்ள மக்களிடையே பள்ளிக்கூடங்கள் கட்ட வேண்டுமென்று உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஆகவே அவர்களுக்குத் தூண்டுதல் இருப்பதற்காக, பலவகைகளிலும் வரிகளை வசூலிக்கின்ற நிர்வாகத்தாரே அவர்களுடைய பங்குத் தொகையையும் சேர்த்துக் கட்டி பயன்படுத்திக் கொள்வதற்கான வகையில் ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தாற்போல், இப்பொழுது பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்படுத்திய பிறகு மேஜர் பஞ்சாயத்துக்கள் வசூலிக்கும் கேளிக்கை வரிகளை இவர்கள் எடுத்துக்கொண்டு, பங்குத் தொகை கொடுக்கப்படுமென்று சொல்லப்படுகிறது.

ஆனால் அதற்கு வேண்டிய விதிகளை இன்னும் செய்யவில்லை என்பதை இந்த நேரத்தில் கூறிக் கொள்ள விரும்புகின்றேன். இதைத்தவிர இன்றைக்கு மேஜர் பஞ்சாயத்துக்களை எடுத்துக் கொண்டால், குறிப்பாக எல்லா மேஜர் பஞ்சாயத்துக்களும் இந்த கேளிக்கை வரியிலிருந்து வரக்கூடிய வருமானத்தை வைத்துக்கொண்டு தான் பஞ்சாயத்தின கீழ் இருக்கக்கூடிய கிராமங் களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து கொண்டு வருகிறது. விருத்தாசலம் பனருட்டி, திருக்கோயிலூர், புவனகிரி போன்ற மேஜா பஞ்சாயததுக்களை எடுத்துக் கொணடால், அவைகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு 40,000, 50,000 என்று இந்த கேளிக்கை வரிகளின்மூலம் வருகிறது. அதை இந்த பஞ்சாயத்து யூனியன்கள் எடுத்துக் கொண்டு, அவர்களுக்கு ஒரு குறுகிய அளவு உதவித் தொகை கொடுத்தால், பஞ்சாயத்து எவ்விதத்திலே நல்லமுறையில் நடக்க முடியும்? ஆகவே இதைக் கவனத்தில் வைததுக்கொண்டு மற்ற எந்த மானயத்தை நிறுத்தி விட்டாலும் இந்த கேளிக்கை வரியை மாத் திரம் கேட்க வேண்டாமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். ஆகவே இந்த கேளிக்கை வரியை மாற்றியமைப்பதில் தீர ஆலோசனை செய்து மற்ற பஞ்சாயத்துக்களினுடைய எண்ணங்களையும் கேட்டு, அதற்கு பிறகு முடிவெடுக்க வேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்ள விரும்பு கின்றேன். போன ஆண்டு விவாதத்தின் போதும், இந்தச் சட்டசபையில் இதைத்தான் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஆகவே இதிலே நன்கு கவனித்து, நல்லதொரு முடிவு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயிகளுக்கு எருவை, அதாவது அமோனியம் சல்பேட் போன்ற உரத்தை விநியோகிக்கின்ற நேரத்தில், ஒவ்வொரு கிராமத்திற்கும் விவசாய அபிவிருத்தி கமிட்டி (Food Improvement Committee) அமைக்கப்பட்டிருக் கிறதே, அந்தக் கமிட்டிக்கு ஒப்படைத்து, இதை விநியோகிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் பிளாக்கு தலைமை அலுவலகத்தை ஏற்படுத்துகின்ற நேரத்தில் அதற்குக் கட்டிடம் கட்ட வேண்டுமென்றால், அந்தக் கட்டிடத்தைக் கட்டி முடிப்பதற்கு எப்படியும் ஓரிரண்டு ஆண்டுகள் ஆகிவிடுகிறது. நல்லூர் பிளாக்கு கட்டிடம் 1959-ம் ஆண்டு அக்டோபர் மாதம் ஆரம்பிக்கப் பட்டும், இன்னும் முடிக்கப்படவில்லை. அதேபோல கிராமத்தில் பிளாக்கு ஆபீசுக்கு வந்துபோவதற்கு நல்லமுறையில் போக்குவரத்து வசதி கிடையாது. கிட்டத்தட்ட 15, 20 மைல்கள் தூரத்திலிருந்து கிராமத்திலுள்ள மக்கள் வந்து, இந்த ஆபீசுகளிலுள்ள அதிகாரிகளைப் பார்த்து எந்த விஷயத் தையும் கேட்டுப் போவதற்கு முடியாமல இருக்கிறது. ஆகவே போக்கு வரத்துக்கு வேண்டிய பஸ் வசதிகள் செய்து தரவேண்டும். மெயின் ரோட் டிலிருந்து வரவேண்டுமானாலும் 3 மைல்கள் நடந்து வரவேண்டியிருக் கிறது. ஆகவே சிதம்பரத்தில் ஒரத்தூர் பிளாக்கு தலைமை அலுவலகத்தை வைத்திருப்பதுபோல், நல்லூர் பிளாக்கிற்கு தலைமை அலுவலகத்தை மெயின் ரோடிலுள்ள கண்டப்பனகுறிச்சி, வேப்பூர் போன்ற இடங்களில் செயல்படும்படி மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். பிளாக்குகளில் உள்ள எல்லா அதிகாரிகளுக்கும் வீடுகள கட்டிக் கொடுக் கப்படவேண்டும். அங்கு வேலை செய்கின்ற 'எக்ஸ்டென்ஷன் ஆபீசர் பார் பஞ்சாயத்து', 'எக்ஸ்டென்ஷன் ஆபீசர் பார் இண்டஸ்டிரீஸ்', கிளர்க்ஸ், கிராமசேவக்ஸ் போன்றவர்களுக்கும் வேண்டிய வீடுகளைக் கட்டித் தரவேண்டும் என்று நான் இந்த நேரத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன்.

11 a.m.

இறுதியாக, பி. டி. ஓ. வேலைக்கு உயர்த்துகிறபொழுது எந்த இலாகா விலிருந்து வந்தார்களோ அந்த இலாகாவுக்கு உயர்த்துவோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஏற்கனவே ரெவின்யூ இலாகாவினரைப் ப்ரமோஷன் செய்யவேண்டும் என்று குறிப்பிட்டார்கள். பஞ்சாயத்தில் சேர்க்கப்பட்ட அதிகாரிகளை அந்த இலாகாவிலிருந்து உயர்த்துவதாய் இருந்தால் ஏற்கனவே மக்களிடையே நன்கு பழகி உள்ளவர்கள், அடிக்கடி பஞ்சாயத்து வேலைகளில் கவனம் செலுத்தியவர்கள் எக்ஸிகியூடிவ் ஆபீசர்ஸ்' டெப்யூடி பஞ்சாயத்து ஆபீசர்ஸ் ஆகியவர்களுக்கு ப்ரமோஷன் ஏற்படுத்தவேண்டும்.

அந்த மாதிரி அகௌண்ட்ஸ் செக்ஷனுக்கு லோகல் பண்டு ஆடிட் டிபார்ட்மெண்டிலிருந்து அகௌண்டெண்ட்ஸ் போடப்போகிறோம் என்று சொன்னார்கள். இப்பொழுது அந்த உத்தரவைத் திருமபப் பெற்றுக்கொண்டு ரெவின்யூ இலாகாவிலுள்ள அதிகாரிகளைப் போடவேண்டுமென்ற எண்ணம் இருப்பதாக தெரியவருகிறது. அந்த எண்ணத்திற்கு போகவேண்டாம் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன. அவர்கள் கணக்கில் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள். ஆகையால் அவர்களைக் கொண்டு தான் அகௌண்டெண்டெண்ட்ஸ் ஆகப் போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே இந்த மான்யத்தில் பேசுவது எனக்கு ஒரு மகிழ்ச்சி. இதை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். மகாத்மா காந்தியை இந்த உலகத்திலே ஏற்றுக் கொண்டிருக்கிறோம் என்றால் அந்த எண்ணம் படைத்தவர்கள் இருக்கிறோம் என்றால், அவருடைய கருத்துக்கு நேரடியாக மதிப்புக் கொடுக்கக்கூடிய இலாகாவிலே இது ஒன்று. தன் கையே தனக்கு உதவி, தன் காலில் தானே நிற்பது, சுயதேவை என்ற கொள்கையை அவர் வகுத்தார். அந்தப்படிக்கு முடிந்த அளவுக்கு நாம் முயற்சி எடுத்துக்கொண்டு படிப் படியாக அரசாங்கம் அநேக திட்டங்களை நிறைவேற்றி வருகிறது. இப்பொழுது ஒதுக்கப்பட்ட தொகைக்கு வெட்டுப் பிரேரேபணை கொடுக்கப்பட்டிருக்கிறது. நான் சொல்லுகிறேன், இதற்கு இன்னும் தொகை அதிகமாகக் கொடுத்திருக்கவேண்டுமென்று.

காந்தீயப் பிரசாரம் தான் நீங்கள் செய்கிறீர்கள் என்று சொன்னாலும் அதை ஒத்துக் கொள்ளலாம். கட்சிப் பிரசாரம் செய்கிறார்கள் என்று சிலர் வருத்தப்படுகிறார்கள். ஆரம்பத்திலே அதைக் குறித்து ஒரே ஒரு வார்த்தை சொல்லிவிட்டு, மேலே செல்ல ஆசைப்படுகிறேன. இந்தத் திட்டம் காந்தீய திட்டம். சாதாரணமாக கிராமமக்கள் முன்வரவேண்டும், அவர்கள் எதற்கும் நகரத்தைப் பார்த்து, நகர மக்களைப் பார்த்து, எதிர்பார்த்து நிற்கவேண்டிய அவல நிலை கூடாது. சுயராஜ்யம் என்றால் வெள்ளையர்களிடமிருந்து விடு படுவது மாத்திரம் அல்ல, மற்றவர்களை அதிகம் எதிர்பார்க்காமல் அவரவர் களே அவர்களுடைய சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளவேண்டும் என்ற ஒரு கொள்கையை மனதில் வைத்துக் கொள்ளவேண்டும் என்று கூற ஆசைப்படுகிறேன். அந்தத் துறையிலே தலைவர்கள் அநேக திட்டங்களை உருவாக்கிக் கொடுத்திருக்கிறார்கள். கிராமங்களை நோக்கி பணி செய்யச் செல்லுகிறோம். சட்டசபை அங்கத்தினர்களும், மற்றும் இதரர்களும் யார் யார் இதில் ஈடுபட்டிருக்கிறார்களோ அவர்களுக்கு இதனுடைய ருசி நன்றாகத் தெரியும். எதிர்க்கட்சி நண்பர்களும் சிலர் இதைப்பற்றி அன்போடு இதனுடைய ருசியை அறிந்தே பேசுகிறார்கள். இருந்தாலும் சில விஷயங் களில் சற்று வேறு விதமாக நினைக்கிறார்கள்.

கதர், தீண்டாமை, சிறு சேமிப்பு, கிராமக் கைத்தொழில்கள் போன்றவை களெல்லாம் இந்தத் திட்டத்தில் அடிப்படையானவை. இவைகளெல்லாம் தான் கிராமத்தை முன்னேற்ற முடியும். கம்யூனிஸ்டு கட்சியினருக்கு பெரிய மெஷின்களை வைத்துத் தான் நாடு முன்னேற வேண்டுமென்ற எண்ணத் திலே கிராமக் கைத்தொழில்களுக்கு எந்த அளவுக்கு அவர்களுடைய ஆதரவு இருக்கிறது என்று என்னால் சொல்ல முடியாது. இப்பொழுது அவர்கள் கதரை ஆதரிக்கவில்லை என்று நினைக்கிறேன. இன்னொரு கட்சியினர் கைத்தறியை மாத்திரம் ஆதரிக்கிறோம் என்று பாதிக் கிணறு தாண்டுகிறார்கள். கைத்தறிக்கு ஆதாரமாக உள்ள கதரை ஆதரிக்கவில்லை. அந்த மக்களை பிச்சை எடுக்கச் சொல்லுகிறார்களா என்று தெரியவில்லை. இதையெல்லாம் அவர்கள் தவறாக நினைக்கிறார்கள். இந்தத் திட்டத்தைப் பற்றி மந்திரிகளோ, மற்ற தலைவர்களோ, ஊழியர்களோ பிரசாரம் செய்தால் உங்கள் கட்சிக் கொள்கையைப் பிரசாரம் செய்கிறீர்கள் என்று சொல்லு கிறார்கள். அது நல்ல கொள்கை. கிராம அபிவிருத்தித் திட்டம், காந்தீய திட்டம் அவர்களுக்கு இது வேறு ஒருவாறாக படுகிறதோ என்னவோ தெரியாது.

நான் மேற்கொண்டு இந்தத் திட்டம் நன்றாக நடைபெற வேண்டி சில கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். முதலில் ஜனத்தொகை அடிப்படையில் வட்டாரங்கள் பிரிக்கப்பட்டுவிட்டது. அதற்கு ஒரு மறுப்பு தெரிவித்து சில சமயங்களில் எடுத்துச் சொல்லப்பட்டது. நாங்கள் எ. பி. ஸி. டி. என்ற அடிப்படையில் வட்டாரங்களாகப் பிரித்துப் பின்தங்கிய வட்டாரங்களுக்கு அதிகமாகத் தொகை கொடுக்கிறோம் என்று சொல்லப்படுகிறது. அது ஓரளவுக்கு மேல். எங்கள் சேலம் ஜில்லாவை எடுத்துக் கொண்டால் 52, 54 பிளாக்குகள் இருக்கின்றன. பாதிக்கு மேல் விஸ்தீரணம் இருந்தால் கூட வட சேலத்தில் 18 பிளாக்குகள் இருக்கிறது. ஒவ்வொரு பிளாக்குக்கும் ரூ 15 லட்சம் கிடைக்கிறது எற்கெனவே ஜனத்தொகை அடிப்படையில் பிரிக்கப்பட்ட ஒரு பகுதிக்கு இப்பொழுது இத்தகைய திட்டத்தினால் இரட்டிப்பு பணம் போய்ச் சேரலாம். முன்னேறிக்கொண்டிருக்கிற பகுதியே மேலும் முன்னேறலாம். எங்கள் சேலம் ஜில்லாவில் கல்வித் துறையில் எவ்வளவோ முன்னேற்றம் எற்பட்டிருந்தாலும், இப்பொழுதும் கடைசி ஸ்தானத்தை அது விடவில்லை. முன்னேற்றம் அடைந்த பகுதிக்கே மறுபடியும் பணம் போய்ச் சேரும்படியான நிலைமை இருக்கிறதே அதைச் சற்று மாற்றி அமைக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இதிலுள்ள கொள்கை என்ன என்பதை வட்டார வளர்ச்சியிலே நாம் சரிவரத் திட்டமாகச் சொல்லவேண்டும், உணவு உற்பத்திக்கு இப்பொழுது மாறிவிட்டார்கள். உணவு உற்பத்தி தான் வட்டார வேலைகளில் மிகவும் முக்கியமானதா ? அல்லது பண்பு, தன்மை, ஒழுங்கு மக்களுடைய மற்ற பல விதமான முன்னேற்றம் இதில் சேர்ந்ததா என்பதை சொல்லிவிடவேண்டும். ஆரம்பத்தில் அப்படி இருக்கவில்லை. உணவுப் பூர்த்தி இப்பொழுது எற்பட்டிருக்கிறது. இந்த உணவு பூர்த்தியை வைத்துக் கொண்டு, வட்டாரத்திலுள்ள பாமர மக்களை முன்னேற்றத்திற்குக் கொண்டுவர. அதாவது 'எஜூகேடிவ் என்கிற, அதாவது அவர்களைத் தயார் செய்வது, அவர்கள் சுய தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளச் செய்வது, தன் காலில் தான நிற்பது, எதற்கும் பிறரை எதிர்பார்க்கின்ற முறை இல்லாமல் அவர்களைத் தயார் செய்வது இதில் அரசாங்கம் கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பயிற்சியைப் பற்றி அம்மையார் அவர்கள் சொன்னார்கள். சிலர் ரெவின்யூ இலாகாவிலிருந்தும், மற்ற இலாகாவிலிருந்தும் அந்தத் தத்துவம் தெரிந்தவர்களைப் போடவேண்டும என்று சொன்னார்கள். ஏராளமான ஆபீசர்கள் தேவையாக இருக்கும்பொழுது இந்தக் கஷ்டம் இருக்கத்தான் செய்யும் 4, 5 வட்டாரங்களைச் சுற்றிவரக்கூடிய முறையில், அங்குள்ள அதிகாரிகளுக்கு நல்ல போதனையைக் கொடுக்கக்கூடிய நிலையில் தத்தவம் தெரிநத உத்தியோகஸ்தர்களையும், சில உத்தியோகப் பற்றற்றவர்களையும் நியமித்தால், அம்மாதிரி ஏதாகிலும் செய்தால் நன்மை பயக்கும் என்று கருதுகிறேன். உத்தியோகப் பற்றற்றவர்கள் தான் அதிகமாக வேலை செய்யவேண்டிய இயக்கம் இது. உதாரணமாகப் பயிற்சி பெறும் இந்த உத்தியோகஸ்தர்கள் நன்றாக ஒழுங்காக இருக்கிறார்கள். பயிற்சி முடிந்து வட்டாரத்தில் வேலை செய்கிறபொழுது, அவர்கள் பழைய பிரகாரம் நடந்து கொள்ளுவதில்லை. அதை மேலதிகாரிகள் சரிவர அமுல் நடத்தவில்லையா என்றும புரியவில்லை. அதிலே சர்க்கார் கொஞ்சம் கவனம் செலுத்த வேண்டும். நான் சொன்னாலை சற்று மிகைப்படுத்திச் சொல்லுவதாக கருதுகிறார்கள் சிலர் கிராம சேவக்கு என் முன்னாலேயே வந்து நின்றபோது நான் கண்டிருக்கிறேன். ஏதோ 4, 5, இன்ச் வேஷ்டி கீழே புரளுகிறது. பித்தானைத் திறந்துவிட்டுக் கொண்டு நிற்கிறார். எங்கேயோ போவது வருவது போல் போகிறார். அம்மாதிரி இருக்கக் கூடாது. இம்மாதிரி சிலர் இருக்கிறார்கள். எல்லோரும் அப்படி இருக்கிறார்கள் என்று சொல்லவில்லை. இதையெல்லாம் நாம் சரி செய்து கொண்டால் தான் முன்னேற முடியும் என்று நினைக்கிறேன்.

முசௌரியில் ஒரு ஆராய்ச்சிக் கழகம் மத்திய அரசாங்கத்தினால் நடத்தப்படுகிறது ஸ்பெஷல் ஸ்டடீஸ் அண்டு ரிஸர்சஸ் அங்கே நடத்துகிறார்கள். இங்கிருந்து அங்கு சென்று பார்த்து எல்லோரும் பயன் அடைய முடிய

வில்லே. ஏதோ 2, 3 பேர்கள் தான் செல்ல முடிகிறது. அது எப்படி இருந்தாலும், அதேமாதிரி ஒரு சிறிய அளவில் நமது மாகாணத்தில் ஒரு ஆராய்ச்சிக் கழகம் அந்தத் துறையில் ஏற்படுத்தி நம்முடைய கொள்கையை முன்னேற்றிக் கொள்ளுவதற்குப் பாடுபட்டால் நலமாக இருக்கும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

முன்பு 'செமினர்' என்று அதிகாரிகளேயும், மற்றவர்களேயும் சேர்த்துக் கூட்டி அடிக்கடி ஒருவரை ஒருவர் பார்த்துப் பேசிக்கொள்ள சந்தர்ப்பங்கள் இருந்தன. இப்பொழுது அது முடியவில்லே. காரணம் முன்பெல்லாம் வட்டாரங்கள் குறைவாக இருந்ததுடன், எல்லா ஜில்லா அதிகாரிகளேயும் வட்டாரக் கூட்டத்தில் சந்திப்போம். இப்பொழுது வட்டாரங்கள் அதிகமாக ஆகிவிட்டதால் அம்மாதிரி அதிகாரிகளேச் சந்திக்க முடியவில்லே. ஏதோ 2½ மணி நேரம் ஜில்லா அபிவிருத்திக் கவுன்சில் கூட்டம் நடந்தால், அத்தனே பிளாக்குகளுக்கும் சேர்த்து, அவசரம் அவசரமாகத்தான காரியங்களேச் செய்ய முடிகிறது. அதனுல் அவ்வளவு பலன் பெற முடியவில்லே. பலனே இல்லே என்று சொல்லவில்லே. இந்தத் துறையிலே முக்கியமாகக் கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அதிகாரம் அதிகமாகக் கொடுக்கப்படவில்லே என்று சொல்லுகிறுர்கள்; அதிகாரம் தேவைதான். ஒன்றுமே அதிகாரம் இல்லாமல் இருந்தது போக, இப்பொழுது இவ்வளவு அதிகாரங்கள் கொடுத்திருக்கிறுர்களே என்பதைச் சற்று மனதில் கொள்ளவேண்டும். சில சமயங்களில் நானே நினேப்பது உண்டு. ஒரேயடியாக வட்டாரத்திலிருந்து அதிகாரத்தைப் பிரித்து இப்படிக் கிராம அடிப்படையில் சுயராஜ்யம் கொடுத்துவிட்டார்களே, தாலுகா அளவிலாவது முதலில் கொடுத்துப் பார்த்துக்கொண்டு செய்யக் கூடாதா என்று தோன்றுகிறது. வரி போடுவதற்குத்தான் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னுர்கள். வீட்டுக்கு வரி போடுவது போன்ற இன்னும் எத்தனேயோ துறைகளில் வரி போடாமல் பின்தங்கி கஷ்டப்படுகிறுர்கள். அதிகாரம் வரி போடுவதற்கும் சேர்த்துத்தான். சர்க்கார் கொடுக்கிற பணத்தை மாத்திரம் வாங்கிச் செலவழிப்பது என்பது இல்லே. அப்படியிருக்கும்பொழுது அதிகாரம் இல்லே, இல்லே என்று சொல்லுவதற்கு இல்லே, போகப்போக இன்னும் அதிகாரம் கொடுக்கப்படும் என்று நான் கருதுகிறேன்........(மணி அடிக்கப்பட்டது).

* Sri T. R. RAMAMIRTHA THONDAMAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன்கள் ஸ்தல அபிவிருத்தி தேசிய வளர்ச்சித் திட்ட மானியத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன் இவைகள் பற்றி பல அங்கத்தினர்கள் தெரிவித்தார்கள். இந்த நாட்டில் பஞ்சாயத்து ரஜ்யம் ஏற்பட்டு அபிவிருத்தி ஏற்படவேண்டுமென்று நினேத்தபோதிலிருந்து முதல் கட்டம் பஞ்சாயத்து யூனியன்கள் அமைப்பது முடிந்து விட்டது; இரண்டாவது கட்டம் அமையப்போகும் நிலேயில் இருக்கிறேம். நாட்டின் முன்னேற்றத்திற்கும், மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் சாதகமான சூழ்நிலேயை ஏற்படுத்த, அடிஷனல் டெவலப்மென்ட் கமிஷனர் அவர்கள் ஆங்காங்கே ஜில்லாக் கூட்டங்களிலும், மற்ற இடங்களிலும், மக்கள் பிரதிநிதிகளுக்கும் பஞ்சாயத்துத் தலேவர்களுக்கும் அதிகாரிகளுக்கும் பஞ்சாயத்து விஷயத்தை அறிவுறுத்தி வரும்போது, இந்தத் திட்டங்களுக்கு வழிகாட்டியாக இருந்து வந்த மகாத்மாஜியின் கருத்துக்களே எடுத்துக் காட்டி முன்னேற அறிவுரை வழங்குகிறுர்கள். அப்படிப் பேசும்போது, அவர்கள் காந்திஜி பெயரையும், காங்கிரஸ் அமைச்சர்கள் பெயரையும் சொல்லும் முகமாகச் சொன்னுல் அதற்கு ஆட்சேபம்; அவரிடம் இனிமேல் அந்தப் பெயர்களேச் சொல்லக்கூடாது, இந்தத் திட்டங்களே உண்டாக்கியவர்கள் பெயரை இவற்றை ஏற்படுத்தியவர்கள் பெயரை இதன் கர்த்தாக்களின் பெயரைச் சொல்லக் கூடாது, பதிலாக மாற்றுக் கட்சி அங்கத்தினர்கள் பெயர்களேச் சொன்னுல் போதும் என்று சொன்னுல், அவர்களும் அப்படிச் சொல்லுவார்கள். அது ஜனநாயக மக்கள் அல்ல. அதிகாரியை கட்சிக் கண்ணேட்டத்தோடு குறை காணுவது சரியல்ல.

[Sri T. R. Ramamirtha Thondaman] [24th March 1961

பஞ்சாயத்து அபிவிருத்தி சம்பந்தப் பட்டவரை நல்ல வழிகாட்டியாகவும், முன்னோடியாகவும் பண்போடு பணியாற்றி வரும் அடிஷனல் டெவலப் மெண்ட் கமிஷனர், மற்றைய மாகாணங்களைவிட நம்மாகாணம் முன்னணியில் நிற்கப் பணி புரியும் அவர்களைப் பாராட்டுகிறேன். அவர்கள் தேச சேவையும் திடமான உள்ளமும் நாட்டில் நிலைத்து விட்டது என்பதை மட்டும் யாவரும் அறிவர்.

இன்றைக்குத் தேசிய அபிவிருத்தி பகுதியாகச் செயல்பட்ட ப்ளாக்குகளை பஞ்சாயத்து யூனியனில் மாற்றி வைக்கப்பட இருக்கிறது. ஸ்தல அபிவிருத்தி என்ற பெயரில், ஜில்லா போர்டும், மக்களும், சார்க்காரும் பணங்கள் கொடுத்து வேலைகள் செய்யப்பட்டன. அம்மாதிரியான ஜில்லாபோர்டு வேலைகள் பூராவும் பஞ்சாயத்து யூனியன் அதிகாரங்களாக மாற்றப்படப் போகிறது. அம்மாதிரிப் பங்கு கொடுத்து பஞ்சாயத்து யூனியன்கள் செயல்பட முடியாது. ஜில்லா போர்டுகளால் நிர்வகிக்கப்பட்ட ரோடுகள் பூராவும் சென்ற காலத்தில் பணமுடக்கடி காரணமாக, ஆசிரியர்கள், ஊழியர்கள் மற்றவர்களுடைய ஊதியமும் சரிவரக் கொடுக்கப்படாத நிலைமை இருந்து வந்திருக்கிறது. என் தொகுதியில் மூன்று பஞ்சாயத்து யூனியன்கள் இருக்கின்றன. அவை எங்கள் ஜில்லாபோர்டு நிர்வாகத்தின் கீழ் இருந்த ரோடுகளை பராமரிக்க வேண்டுமானால் அதற்குரிய பணம் ஒதுக்கும் நேரத்தில் அந்த ரோடுகளை பஞ்சாயத்து யூனியன் எடுத்துச் செயல்படும் முறையில் செய்ய வேண்டும். இதிலே மற்றொரு தொல்லை இருக்கிறது. ஒவ்வொரு வருஷத்திற்கும், இவர்கள் திட்டம் தயாரிக்க வேண்டும். சென்ற காலத்தில் திட்டம் போடுவது, பட்ஜட் தயாரிப்பது எல்லாம் சட்ட மன்றங்களிலோ, பெரிய முனிசியாலிடிகளிலோ, ஜில்லா போர்டுகளிலோதான் செய்துவந்தார்கள். அவர்களுக்குத்தான் அது தெரிந்திருந்தது. திட்டம் தயாரிப்பது என்பது கிராம மக்களுக்கு சுத்தமாகத் தெரியவில்லை. எனக்குக்கூட இதெல்லாம் புரிவதில்லை. இப்பொழுதுதான் புரிந்து கொள்ள ஏற்பாடுகள் செய்கிறார்கள். பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் இன்றைக்கு ரோடுகள், ஏரிகள் பராமரிப்பு, உணவு உற்பத்தி, ரசாயன உரத்தைப் பெருதல், குடி தண்ணீர் வசதிகள் இம்மாதிரிப் பல திட்டங்களைச் செய்ய வேண்டும். கிராமப் பகுதிகளில் சேகரிக்கப்படும் தானியங்களை, மில்காரர்களோ, வியாபாரிகளோ வாங்கி, ஸ்டாக் செய்து, அப்படி ஸ்டாக் செய்த தானியத்தின் பேரில் சர்க்கார் லோன் பெற்று, கடைசியில் மூட்டைக்கு 4, 6 என்று கமிஷன் வைத்து கொள்ளை லாபம் இடைக்குள்ளே அடையும் நிலைதான் வருகிறது. ஆகவே, அதைத் தவிர்க்க ஒவ்வொரு கிராமத்திலும், ஓரிடத்தில் சேர்த்து வைக்கக் கூடிய கிடங்குகளைக் கட்டிக் கொடுத்து, அங்கே நெல் முதலியவற்றைச் சேகரிக்க உதவவேண்டும். கூட்டுறவு நாணய பாங்குகள், சென்ட்ரல் பாங்குகள் மூலம் கடன்கள் வழங்கவேண்டும். இதையெல்லாம் நன்றாகப் புரிந்துகொண்டு கிராம மக்கள் பஞ்சாயத்துத் தலைவர்கள் பணியாற்ற வேண்டும். எது கிராமத்திற்கு லாபகரமாக இருக்குமோ அந்த விதத்தில் செயல்பட்டு, கிராம மக்களின் முன்னேற்றத்திற்கு இன்னின்ன தேவை என்று கிராம திட்டங்களை யூனியனில் சமர்ப்பிக்கிறார்கள். யூனியனில் அந்தத் திட்டங்களைப் பரிசீலனை செய்வார்கள். அப்பொழுது அவர்கள் ஒதுக்கப்பட்ட பணம், வசூலிக்கப்படும் பணம், டொனேஷனைத் வரக்கூடிய பணம் இவற்றையெல்லாம் சேர்த்துப் பார்க்கவேண்டும். சென்ற காலத்திலே ஜில்லா போர்டு நிதி நிலை போதுமோ போதாதோ என்ற சந்தேகத்தில் இருந்தது. ஆகவே அம்மாதிரி ஜில்லா போர்டு நிர்வாகத்திலிருந்து ரோடுகளை கொடுக்கும்போது, 3, 4 மைல்களுக்கு அதிகப்படியான ரோடுகளை ஹைவேஸ் நேரிடையாக எடுத்துக் கொண்டு, அதாவது குறைவான ரோடுகளை வெளியூர் பஞ்சாயத்து ரோடுகளாகக் கருதி அதனால் அதிகப்படியான பணத்தை ஒதுக்கி, வேலைகளைச் சரியாகச் செய்யும் முறையில் அவசியமானால் அமைப்பில் மாற்றம் ஏற்படுத்தினால், நல்லதாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஸ்தல அபிவிருத்தி தேசிய அபிவிருத்தி வேலைகளைப் பஞ்சாயத்து யூனியன்களோடு ஒன்றாக இணைத்து ஒரே முறையில் செயல்படும் நிலையை உண்டாக்க வேண்டும் என்று தெரிவிக்கிறேன். பஞ்சாயத்து யூனியன்களிடம் ஏராளமான அபிவிருத்தி வேலைகளை ஒப்படைத்து தேவைக்குரிய பணமில்லாமல் செய்ய முடியாது.

யூனியன்களுக்கு அதிகாரம் இல்லை என்று குறிப்பிடப்பட்டது. நிச்சயமாக பஞ்சாயத்துக்களில் உள்ளவர்கள் பயிற்சி பெறாதவர்கள். அதிகாரிகள் அப்படியில்லை. கிராம சேவக்குகள் இரண்டு வருஷம் கிராமங்களில் என்னென்ன செய்யவேண்டும் என்று கடுமையான பயிற்சி பெற்றவர்; அதேபோல கிராம சேவகிகளும் பயிற்சி கொடுக்கப் பட்டவர்கள். அம்மாதிரியே எல்லோரும் பயிற்சி பெற்றவர்களாக இருக்கிறார்கள், கல்வியில் கிராமத் தொழில்களில். அங்கே ஜூனியர் எஞ்ஜினியர்கள் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் நிர்வாகத்தில் நல்ல பயிற்சி பெற்றவர்களாக இருப்பவர்கள். நிர்வாகத்தை நடத்தி அனுபவம் அடைந்தவர்கள். கமிஷனர் அவர்களும் பயிற்சி பெற்றவர், வெளியூரில் இருக்கும் அத்தனை அதிகாரிகளும் பயிற்சி பெற்றுதான் செயல் படுகிறார்கள்.

பஞ்சாயத்து யூனியன் சேர்மெனும், பஞ்சாயத்துகளின் தலைவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். தேர்தல்களில் வரலாம், போகலாம், அவர்கள் ஜன பிரதிநிதிகள். அவர்களுக்கு இந்தப் பயிற்சி கிடையாது. அவர்களிடத்தில் நிர்வாகப் பொறுப்பை ஜாஸ்தியாகக் கொடுத்துவிட்டால் வேலைகள் சரிவர நடைபெறாது. அந்த யூனியன் தலைவர்கள், யூனியன் அங்கத்தினர்கள் இவர்கள் சொல்கிற யோசனைகளின்படி நிர்வாக அதிகாரிகள் செயல்படும்படியாகச் செய்யவேண்டுமென்பதோடு பஞ்சாயத்து தலைவர்களிடத்தில் மரியாதையாக நடந்து கொள்ளும்படியாக கேட்டுக்கொள்கிறேன். மக்கள் பிரதிநிதிகள் கொடுக்கிற திட்டங்களை பஞ்சாயத்து, பஞ்சாயித்து யூனியன் தீர்மானங்களை கீழ்ப்படிந்து நிறைவேற்றுவதுதான் அதிகாரிகள் வேலையாயிருக்கவேண்டும்—என்னுடைய தொகுதியில் உள்ள பஞ்சாயத்து யூனியனை எடுத்துக்கொண்டால் அது மிகவும் நல்ல முறையில் செயல்படுகிறது. மேலும் அதை ஊக்குவிக்கக்கூடிய முறையில் யூனியனுக்கு யூனியன் இருக்கும் ஏற்றத்தாழ்வுகளைக் கருதி பண உதவி அளிக்க வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுது குளங்கள் பூராவும், பஞ்சாயத்து பராமரிப்பது, மீன் பிடிப்பது மிராசுதார் பாத்யமுள்ளவர் என்ற நிலையைமாற்றி தனிப்பட்ட மிராசுதார்களுக்குச் சொந்தமான குளங்களானாலும் பஞ்சாயத்து போர்டுகளுக்குத்தான் சொந்தம் என்ற உத்தரவையும் போட்டுவிடவேண்டும். பராமரிப்பது பஞ்சாயத்து, உரிமை மிராசுதாரர்களுக்கு என்று விட்டுவைப்பது பயன் படாது. புறம்போக்கு நிலங்களை எல்லாம் பஞ்சாயத்துகளுக்கு உரிமையாக்குவதோடுகூட புறம்போக்கு நிலம் இல்லாத கிராமங்களில் தனிப்பட்டவர்களுடைய நிலங்களைக்கூட ஆர்ஜிதம் செய்து பஞ்சாயத்துக்களுக்கு உரிமையாக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற வருஷம் மயானம், களம் இவைகளை பஞ்சாயத்துக்களுக்கு மாற்றியதில் பெரிய குறை இருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திலும் எத்தனை ஏக்கரா புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன என்பதற்கு உடனடியாகச் சர்வே செய்ய வேண்டும் என்றும் பஞ்சாயத்துக்களுக்கு எவ்வளவு நிலங்கள் தேவையோ அவ்வளவும் கொடுக்க சர்க்கார் தயங்கக் கூடாதென்றும் கேட்டுக் கொண்டு, எனக்குப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு நன்றி தெரிவித்து எவ்வளவோ பேச இருந்தும் நேரமில்லையே என்ற வருத்தத்துடன் முடிக்கிறேன்.

*SRI S. **RAMALINGA PADAYACHI**: சட்ட மன்ற உதவித் தலைவர் அவர்களே, நமது முதலமைச்சர் அவர்கள் கொண்டுவந்துள்ள மானியக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நமது தேசம் சுதந்திரம் அடைவதற்கு முன் மகாத்மா காந்தி ராமராஜ்யம் பெறவேண்டுமென்ற லட்சியத்தை, கொள்கையை வற்புறுத்தினார். அந்தக் கொள்கை அடிப்படையில் தான் சுதந்திரமும் கிடைத்தது. சுதந்திரம் அடைந்த பிறகு காங்கிரஸ் கட்சி அரசாங்கத்தை எடுத்து நடத்தி வருகிறது. மகாத்மா காந்தி கண்ட லட்சியமாகிய ராமராஜ்யம் மலரவேண்டும் என்பதற்காக வேண்டியே 1958-ம் ஆண்டில் ஸ்தல சுயாட்சிச் சட்டத்தை இயற்றி அதிகாரங்களைப் பரவலாகக் கொடுத்திருக்கிறது. இதனால்தான் நிர்வாகத்தில் மக்களும் பங்குகொள்கிற வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது.

நல்லவர்களோ, கெட்டவர்களோ இன்றையதினம் மக்கள் தங்கள் இனத்தவர்களிடத்திலேயே நம்பிக்கை வைத்திருப்பதனால் அங்கங்கே அவரவர்களுடைய சாதியார்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு நிர்வாகத்திற்கு வரலாம். ஆனால் இதைக் கண்டு அச்சப்படவேண்டியதில்லை. கொஞ்ச காலத்திற்கு எல்லாம் இந்த எண்ணம் போய்விடும். நாட்டுக்கு உண்மையாக உழைப்பவர்கள் யார் என்பதை உணர்ந்து அவர்கள் நடந்து கொள்ள ஆரம்பித்துவிடுவார்கள். உண்மையான தியாகிகள், உண்மையான சேவகர்கள் இவர்களையே தேர்ந்தெடுக்க ஆரம்பித்துவிடுவார்கள். அப்போது நிச்சயமாக ஸ்தல சுயாட்சி நிர்வாகமானது சிறந்த முறையில் வெற்றிதரும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். கல்வி வசதி, சுகாதார வசதி, ரோடு வசதி எல்லாம் சிறப்பாக நடைபெற்று நாடு நலம் பெறும் என்ற நம்பிக்கையானது உறுதிபடுவதற்கு நிறைய சந்தர்ப்பங்கள் இருக்கின்றன.

அடுத்தபடியாக "கிராம அபிவிருத்தி, தல நிர்வாகத்துறை" என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ள புத்தகத்தில் 7-வது பக்கத்தில் 12-வது பாராவில், "ஒவ்வொரு பஞ்சாயத்து வளர்ச்சி வட்டாரமும், கிராமப் பணிகள் மானியம் என்று வருகிற ஐந்தாண்டுகளுக்கும் பெற்று வரும். இதன்படி இம் மாநிலத்தில் உள்ள 374 வட்டாரங்களும் இரண்டு மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களில் பத்து வருஷங்களிலும் சமமான அரசாங்க உதவியைப் பெற்று வரும்" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது வரையில் ஏற்படுத்தப்பட்டிருக்கிற வட்டாரப் பகுதிகளோடு, இனிமேல் ஏற்படப்போகும் வட்டாரப் பகுதிகளையும் சேர்த்து எல்லாவற்றுக்கும் சமமாகப் பணத்தை பிரித்துக் கொடுப்பது என்றால் புதிதாக ஏற்பட இருக்கும் வட்டாரங்கள் முதலில் ஏற்படுத்தப்பட்டு இருக்கும் வட்டாரங்களுக்குச் சமமாக எவ்வாறு இயங்க முடியும்? இதை மனதில் வைத்து புதிதாக ஏற்படப்போகும் வட்டாரங்களுக்கு பழைய வட்டாரங்களுக்குக் கொடுக்கிற பணத்தைவிட கொஞ்சம் அதிகமாகவே ஒதுக்கித் தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

டெல்டா பிரதேசங்களில் செய்யக்கூடிய நீர்ப்பாசன வசதிகள் P. W. D. இலாகா எடுத்துக் கொள்கிறது. மானம் பார்த்த பிரதேசங்களில் இருக்கக் கூடிய ஆயக்கட்டுகள் மைனர் இரிகேஷனிலிருக்கிறது. பெருவாரியாக இதையும் பஞ்சாயத்துக்கள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சொல்லப் பட்டிருக்கிறது. ஆகையால் சிறிய நீர்ப்பாசன வசதிகளைப் பொறுத்த வரையில் பஞ்சாயத்துக்கள் எடுத்துக் கொள்ளும்பொழுது டெல்டா பிரதேசத்திற்கும், மானம் பார்த்த பிரதேசத்திற்கும் ஒரேவிதமாக பணம் ஒதுக்குவது என்றால் சரியாக இராது. மானம் பார்த்த பிரதேசங்களுக்கு எல்லாம் கணிசமான தொகை அதிகமாக ஒதுக்கவேண்டுமென்று சொல்ல ஆசைப்படுகிறேன்.

என்னுடைய தொகுதியில் ஒரு வட்டாரப் பகுதி இருக்கிறது. அந்த வட்டாரப் பகுதியில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதாகவே கருதுகிறேன். அந்த வட்டாரப் பகுதியில் உள்ள மக்கள் பல நன்மைகளைப் பெற்றிருக்கிறார்கள். அதைப்போல எல்லாப் பகுதிகளும் வட்டார அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் வர வேண்டும் என்பதாகச் சொல்லிக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* SRI S. RANGANATHA MUDALIAR: Mr. Deputy Speaker, Sir, it is a common saying that India lives in villages. Neither I who belong to the educated minority with all their airs of intellectual superiority nor for the matter of that, any resident of the City can claim to represent the real life of India. The real life, if one wants to see in India, he must go to the villages. Eighty-three per cent of the Indian population are villagers, of whom 70 per cent are engaged in agriculture. There are 560 thousand villages in India. If one wants to see

the real life of India he must go to one of these 560 thousand villages without directing his attention to the City or the City people and see the particular life which they live. The Britisher when he was ruling us, bestowed least attention upon the villages. He considers the village only as a source of revenue. His interest lay in improving the towns and in that way improving their own ways of life. But the whole thing had to be changed after we own our Independence. Mahatma Gandhi said that if India has to be lifted, if the Indian life and the Indian greatness have to be resuscitated, we must start from the villages. Villages should be restored to their prestine simplicity, purity and efficiency. Until that was done no amount of progress was worth the name. So he wanted to bring about a complete change in the rural life of India and he said that Panchayat Raj should be based on a new orientation. I say that the Community Development Project is based upon the Gandhian philosophy. 'The change of our villages, the change of our society from a static society which is based upon inherited status to a dynamic society which is based upon individual achievement' is the principle on which the Community Development Projects are based. I suppose that it is by way of implementing that principle, the Community Project system is being worked. The Community Project is in its infant stage and it has to face many difficulties. I do not want to waste the time of the House in enumerating all those difficulties. I also do not propose to dwell upon the various advantages that the people have derived and also the various good measures that the Government have undertaken. Of course, enormous amount of work is being carried on.

I only want to focus the attention of the Government on some of the important difficulties to show what obstacles are in the way of successful implementation of the Community Development Projects. The first difficulty is in the matter of training Project Officers. If we are going to leave the implementation of the entire work to officialdom only, I am afraid the system will not work well and it will be a failure. But, we cannot dispense with the assistance of the officials. But the kind of officials that we want for this purpose is those with a certain amount of missionary enthusiasm and spirit. They must be officials who must for the time being, when they are engaged in development works connected with Community Development Projects, forget that they are mere officials of the Government. They must persuade people to take to modern methods of agriculture and also explain to them how they could get things done. In that way, they must be the people's friends, their philosophers and their guides, not in the conventional sense, but in the real sense of the terms. They must go and live in the villages, as one among the villagers. They must feel that they are one among them. They must do all that they can for the welfare of the villagers. That is the kind of enthusiasm that we want at the present moment. At present, we see that officials for the Community Development Projects are recruited from the Revenue Department. I do not say that they are wanting in efficiency, or enthusiasm or sincerity. They are no

doubt doing their mighty best. But inasmuch as we are mainly dealing with villagers and our chief aim is to improve agriculture and thereby increase food production, I would prefer the posting of Agricultural Officers wherever they are available to these Community Development Projects. They can be appointed frequently as Block Development Officers, because, the main thing that they have to do in the Blocks is to teach the villagers how to plough better and how best to increase food production. So, it is better that officials belonging to the Agriculture Department are posted as Block Development Officers. In this connection, I would suggest—if it is not impertinent—that these officers must be made to undergo some special training. Just as missionaries are being trained before they are sent out into the world for the purpose of spreading their religion, our officials must be trained in various ways. They must know how to mingle with people and how to move with the villagers as one among them and how to work with them and all those things. If that spirit is brought about and if that missionary enthusiasm is created, I am sure that within a generation, the whole life of the country will be completely changed.

There are one or two things which I wish to bring to the notice of the Hon. Minister on the questions of policy. Forest-Unreserved and unassessed waste as well as assessed waste lands must be handed over to the Block Development Officers even in places where Panchayat Unions have not been established. No assignment must be made except with the consent of the Panchayat Unions, when they are established. All the development works, including Welfare works, Rural Water-supply Schemes, Comprehensive Scheme of water supply, Local Development works etc., have to be left to the Block agencies, even in places where panchayats have not been formed. In all the Block areas—I mean in every Block area—there must be a Key Village Scheme. Every Block area must be given 50 stud bulls. This is a very important matter. Fertilizer distribution should also be entrusted to the Block agency, the panchayat unions and the Presidents of the panchayats. Of course, they have to receive the supply from the co-operative stores and undertake distribution and bring about satisfactory allocation of these things to the villagers.

I wish to refer to another matter before concluding my speech. There are dispensaries in certain of the blocks and these should be upgraded. With these suggestions, I conclude my speech. Thank you, Sir.

11-30 a.m.

* Sri S. SADASIVAM : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, கிராம அபிவிருத்தி ஸ்தல ஸ்தாபனத்தின் கீழ் கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல அனுமதி கொடுத்த உங்களுக்கு என் நன்றி. 1958-ம் ஆண்டு கொண்டு வரப்பட்ட பஞ்சாயத்து ஆட்சி முறையானது கிராமப்புறங்களி லுள்ள மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த மிகவும் பெரியதொரு உறுதுணையாக இருப்பதை நாம் மட்டுமல்ல, மற்ற மாகாணத்தினரும் புகழ்கின்றனர் என்பதை கண்டு நாம் மகிழ்கிறோம். இந்த அமைப்பிலே

ஒரு சில மாறுதல்களைச் செய்யவேண்டுமென்ற கோரிக்கையை இந்த சமயத்தில் நான் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். 1958-ம் ஆண்டு சட்டப்படி இப்பொழுதுள்ள பஞ்சாயத்து யூனியன்களுக்கு பஞ்சாயத்துத் தலைவர் அங்கத்தினர்களாக்கப்பட வேண்டுமென்று ஒரு இடைக்காலச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம். அதன்படி பஞ்சாயத்துத் தலைவர்கள் பஞ்சாயத்து யூனியன் அங்கத்தினர்களாக வரும்போது அவர்கள் அங்கு அங்கம் வகிக்கிறார்கள். அதே சமயத்தில், பஞ்சாயத்து தலைவர்கள் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்து அவரை நீக்கிவிடலாம் என்ற ஒரு சட்டத்தையும் அமைத்திருக்கிறோம். அப்படி ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டு ஒரு பஞ்சாயத்து தலைவர் நீக்கப்பட்டு, புதிதாக வரக் கூடிய தலைவர் யூனியனில் அங்கத்தினராக இருக்க முடியாமல், முன்பு இருந்த தலைவரே அங்கத்தினராக இருக்கக்கூடிய ஒரு விதி இன்று இருக்கிறது. இந்த அமைப்பு பெரும் மாறுதலை உண்டுபண்ணுவிட்டாலும் இந்த அமைப்புப்படி பழைய தலைவர் பஞ்சாயத்து யூனியனில் அங்கத்தினராக இருப்பது, அவர் அங்குள்ள மக்களின் செல்வாக்கை இழந்திருப்பதால் அந்த பஞ்சாயத்துக்குச் செய்யவேண்டிய சேவை குறைந்து விடுகிறது. ஆகவே இந்த அமைப்பை மாற்றி புதிதாக தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் பஞ்சாயத்து யூனியனில் அங்கத்தினராக வர வேண்டுமென்ற அமைப்பை அமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்று பஞ்சாயத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கின்ற அதிகாரங்களை எல்லாம் நல்ல முறையில் கிராம மக்கள் வரவேற்கிறார்கள். என்னுடைய பகுதியில் இயங்கக் கூடிய பஞ்சாயத் யூனியன் சிறந்த முறையில் சேவை செய்ய வேண்டும் என்கிற அளவில் எல்லோரும் பணியாற்றுகின்றார்கள். இது சம்பந்தமாக அரசாங்கம் நல்ல முறையில் செயல்பட வேண்டும் என்கின்ற அளவில், ஜில்லாக் கலெக்டர், ஜில்லா அபிவிருத்தி கவுன்சில் கூட்டத்தில் பல கருத்துக்களை எடுத்துச்சொல்லி, அதன் மூலம் பல சிறிய திட்டங்களை நிறைவேற்றி வருகிறது. இந்த முறையில் இருக்கக்கூடிய பஞ்சாயத்து யூனியன்கள் நல்ல முறையில் இயங்குவதற்கு அரசாங்கம் வேண்டிய உதவி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இப்போது இருக்கின்ற அமைப்பில், பஞ்சாயத் யூனியன் மூலமாக ரோடுகளை பாதுகாக்க வேண்டும் என்கின்ற அளவில் ரோடுகள் மூன்றாக பிரிக்கப்பட்டிருக்கிறது. மத்திய சர்க்கார் உதவி பெற்று அமைக்கப்படுகின்ற ரோடு, மாநில சர்க்கார் செலவில் அமைக்கப்படுகின்ற ரோடு, பஞ்சாயத்துக்களே கவனித்துக் கொள்கின்ற ரோடு என்ற அளவில் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இதில் முன்னால் ஜில்லா போர்டுகளில் இருந்த ரோடுகள் இப்போது பஞ்சாயத் யூனியனின் கையில் ஒப்படைக்கப்படுவதால், பஞ்சாயத்து யூனியனின் நிதி நிலைமைக்குத் தகுந்தவாறுதான் பராமரிக்க முடியும். ஆகவே இந்த ரோடுகளை எல்லாம் நல்ல முறையில் பராமரிப்பதற்காக போதுமான தொகை அரசாங்கத்திலிருந்து பஞ்சாயத் யூனியன்களுக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாக விவசாயத்தை பெருக்க வேண்டும் என்ற திட்டத்தின் அடிப்படையில் பல சிறு சிறு திட்டங்களை நிறைவேற்றவேண்டும் என்கின்ற அடிப்படையில் ஏற்பாடுகள் செய்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. நம்முடைய மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாயத்தையும், தொழில்களையும் பெருக்க வேண்டும் என்கிற அடிப்படையில்தான் நாம் பல திட்டங்களை அமைத்திருக் கின்றோம். பஞ்சாயத்து யூனியன்களைப் பொறுத்தவரையில் பல சிறு சிறு கைத்தொழில் திட்டங்களை ஏற்படுத்த வேண்டும் என்று ஏற்பாடு செய்திருப் பது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. ஆனால் இன்று விவசாயத்திற்குரிய பல விவசாயக் கருவிகளை தயார் செய்கின்ற சிறிய கிராமக் கைத்தொழில்களுக்கு ஊக்கம் கொடுப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும். ஆங்காங்கு இருக்கக் கூடிய வட்டார வளர்ச்சித் திட்டங்கள் மூலமாக சிறு தொழில்களுக்கு வேண்டிய மூலப் பொருட்களை எல்லாம் (ரா மெட்டீரியல்ஸ்) கொடுக்க வேண்டும். இம்மாதிரியான சலுகைகள் பஞ்சாயத்து யூனியனுக்கு கிடைக்க வேண்டும். அதே நேரத்தில் பஞ்சாயத்து யூனியன் எல்லைக்குள்ளிருக்கும்

கிராமக் கைத்தொழில் மூலம் உற்பத்தி செய்யப்படுகின்ற கருவிகள், வேறு பஞ்சாயத்துகளுக்கும் கொடுத்து, அதன் மூலமாக விற்பனை செய்வதற்கும் வசதி இருக்க வேண்டும். அப்போதுதான் இந்தச் சிறு கைத்தொழில்கள் நல்ல முறையில் விருத்தி அடைய முடியும்.

இன்று முக்கிய தொழிலாக விளங்கக்கூடிய தோல் தொழிலை விருத்தி செய்வதற்கு புதிய வட்டார வளர்ச்சித் திட்டங்கள் மூலமாக பல ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. இன்றைக்கு இருக்கின்ற அமைப்பில், தோலை மட்டும் பதனிட்டு சந்தையில் கொண்டு போய் விற்கக்கூடிய நிலைதான இருக்கிறது. இன்னும் அந்தத் தொழிலுக்கு ஊக்கமும் ஆதரவும் கொடுத்து, பல உருவங்களில் இதை சீர்படுத்தி இந்த கிராமத் தொழிலை ஊக்குவித்து அதன் மூலமாகச் செய்யப்படுகின்ற பொருட்களை விற்பனை செய்வதற்கும் வழிவகை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். கிராமங்களில் இந்தப் பொருட்களை விற்பனை செய்ய முடியாமல் இருப்பினும், சில வட்டார வளர்ச்சி பகுதிகளை ஒன்று சேர்த்து அடுத்துள்ள நகரங்களில் கூட்டுறவு முறையில் ஸேல்ஸ் டிப்போக்கள் ஏற்படுத்தி விற்பனை செய்வதற்கு வசதி செய்து கொடுத்தால் இந்தக் கிராம கைத்தொழிலை நல்ல முறையில் முன்னேற்ற முடியும்.

இன்றைக்கு பஞ்சாயத்து யூனியன்களை அமைக்கின்ற இந்த நேரத்தில் கிராமத்திலுள்ள கிராம பஞ்சாயத்துகளில் இதுவரையில் இருந்து வந்த க்ளுர்க் ளொர்க் வேலைக்கு கிராம கர்ணங்களை நியமிக்கலாம் என்று—சட்ட பூர்வமாக இல்லாவிட்டாலும் கூட—பரீட்சார்த்தமாக முடிவு செய்திருப்பதைக் கண்டு மிக மகிழ்ச்சி அடைகிறேன். கிராம பஞ்சாயத்துகள் எல்லாம் நல்ல முறையில் நடைபெற வேண்டுமென்றால், கிராம அதிகாரிகளுடைய ஒத்துழைப்பு மிகவும் அவசியம். அப்படியிருந்தால்தான் நிர்வாகமும் பஞ்சாயத்து யூனியனுடைய வேலைகளும் நல்லமுறையில் நடைபெறமுடியும். கிராம கர்ணங்களுக்கு முன்னால் இருக்கின்ற அனுபவத்தின் காரணமாக இப்போது பஞ்சாயத்துக்களிலுள்ளவர்களுக்கும், கர்ணங்களுக்கும் பல வேறுபட்ட கருத்துக்கள் எழுகின்றன. இவைகள் எல்லாம் இல்லாமல் நல்ல முறையில் இயங்க வேண்டுமென்றால் கிராம அதிகாரிகளுடைய ஒத்துழைப்பு மிகவும் அவசியம் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படு கிறேன்.

இன்று நம்முடைய ஜனத்தொகை அதிகமாக அதிகரித்து வருகின்ற நேரத்தில் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தை பஞ்சாயத்து யூனியன் மூலமாக நாட்டிலுள்ள மக்களுக்கு விஸ்தரிக்க வேண்டும் என்று வழிவகை செய்யப் பட்டிருக்கிறது. இது மிகவும் வரவேற்கத்தக்கது. ஒவ்வொரு பஞ்சாயத் தும் தங்கள் வட்டாரத்திலுள்ள மக்களுக்கு இதனுடைய நன்மைகளை எடுத்துச் சொல்லி, எந்த விதமான கெடுதலும் இல்லாத இந்தத் திட்டத்தை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும். இந்தத் திட்டத்தை எந்த அளவுக்கு வெற்றிகரமாக நிறைவேற்றுகிறோமோ அந்த அளவுக்கு வாழ்க்கைத்தரம் உயரும். ஆகவே இச் சபையிலுள்ள அங்கத்தினர்கள் எல்லோரும் இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கு உதவி செய்ய வேண்டும் என்று சபாநாயகர் அவர்கள் மூலமாக அங்கத்தினர்களை கேட்டுக் கொண்டு, இதில்பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர் களுக்கு நன்றியையும் தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

*SRI R. SRINIVASA IYER : ஸார், இங்கு கொண்டு வரப்பட்டிருக்கின்ற மான்யக் கோரிக்கையை நான் ஆதரிக்கிறேன். இந்தத் திட்டம் 58-ம் ஆண்டு 35-வது ஆக்டாக ஒரு பெரிய நல்லெண்ணத்தின் பேரில், மக்கள் நல் வாழ்வு வாழ வேண்டும் என்கிற முக்கியமான நோக்கத்தின் பேரில் மிகவும் கஷ்டப்பட்டு இந்தச் சபையிலேயே நன்றாகப் பரிசீலிக்கப்பட்டு நிறை வேற்றப்பட்டு அமலாக்கப்பட்டது. இந்தச் சட்டம் சாதாரணமானவர்களுக்குப் புரிவது மிகவும் கஷ்டமாய் இருந்தது. இதை எல்லோருக்கும் புரிய வேண்டும் என்கிற முறையில் அன்றைக்கு டெவலப்மென்ட் கமிஷனராக இருந்து இன்றைக்கு சீப்-செக்ரட்டரியாக இருக்கின்ற அதிகாரி அவர்கள்

24th March 1961] [Sri R. Srinivasa Iyer]

மிகவும் ஜாஸ்தியாக பிரயாசை எடுத்துக்கொண்டார். இதை எல்லோரும் நல்ல முறையில் புரிந்து கொள்ளவேண்டும் என்ற அடிப்படையில், பஞ்சாயத்து தலைவர்கள், பஞ்சாயத்து கவுன்சில் தலைவர்கள், ஜில்லா கலெக்டர்கள் இவர்கள் எல்லாம் நல்ல முறையில் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக சென்னையில் ஒரு செமினார் நடத்தினார்கள். பின்னால் ஜில்லா வாரியாக செமினார், பின்னால் பஞ்சாயத்து யூனியன் வாரியாக செமினார், பின்னால் சட்டசபை அங்கத்தினர்கள் மூலமாக கிராமங்களிலுள்ள மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய முறையில் செமினார் இவைகள் எல்லாம் நடந்து வருகின்றன. ஆகவே இதில் அனுபவம் ஏற்பட ஏற்பட இந்தச் சட்டம் எல்லோருக்கும் நல்ல விதமாகப் புரிந்து விடும். இது ஆரம்பித்து ஐந்தாறு மாதங்கள்தான் ஆகின்றன. ஒரு சிறு குழந்தையின் பிராயம் தான் ஆகியிருக்கிறது. ஆகவே இதை நல்ல முறையில் செயல்படுத்துவதற்குரிய வழியைத் தேடாமல் குறைகளை மட்டும் சொல்லிக் கொண்டிருப்பது சரியல்ல. இந்தச் சட்டத்தில் பிரியாம்பிள்—என்று முறையில் முன்னுரையாகவே உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கும் ஜனத்தொகையை கட்டுப்படுத்துவதற்கும் மக்கள் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கும் பின்னும் சில குறிப்பிட்ட காரணங்களுக்காகத்தான் இச்சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்போல் விரிவான காரணங்களைக் காட்டி (பிரியாம்பிள்) முன்னுரை உள்ள சட்டம் போல காண்பது அரிது. இதில் பல குறைகள் இருக்கலாம். ஆனால் அந்தக் குறைகளை எல்லாம் நல்ல முறையில் சொல்ல முடியும். (குறுக்கீடு) நண்பர் கோதண்டராமன் அவர்கள் குறைகளைக்குறை சொல்லாமல் எப்படி சொல்வது என்று கேட்கிறார்கள். நல்ல முறையில், அதிகாரிகளைக் குறைகூறாமல் அவர்கள் நன்மைசெய்திருப்பதை பாராட்டிக்கொண்டே குறைகளை நமக்குள் சொல்லலாம். அதிகாரிகள் செய்கின்ற நல்ல வேலைகளை நாம் பாராட்ட வேண்டும். அப்போதுதான் இதிலுள்ள அதிகாரிகளுக்கு உற்சாகம் ஏற்படும். ஆகவே இதைப்பற்றி நான் அதிகமாகச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். இந்தச் சட்டத்தின் மீது கொடுக்கப்பட்டுள்ள ஜி.ஓ.-க்களை எல்லாம் அச்சடித்து இந்த டிபாண்டின் பேரில் விளக்க உரை ஒன்று அங்கத்தினர்களிடத்தில் விநியோகிக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவு ஜி.ஓ.-க்கள் வந்திருக்கின்றன என்று எனக்கே தெரியாது. இந்தச் சட்டத்தைப்பற்றி சாதாரணமாக எல்லோரும் நல்ல முறையில் அறிந்து கொள்ளவேண்டும் என்ற முறையில் எல்லா விளக்கங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இந்தச் சட்டம் நல்ல முறையில் நிறைவேறும் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க வேண்டியதில்லை. சில இடங்களில் வேலை செய்வதற்கு பணம் போதாது என்ற குறை இருக்கலாம். அதையெல்லாம் நிவர்த்தி செய்வதற்கும் தகுந்த பல ஜி.ஓ.-க்கள் இருக்கின்றன. எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் நேரத்திற்குள் இரண்டு விஷயங்களை மட்டும் முக்கியமாக சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஹைவேஸ், ரூரல் வொர்க்ஸ் இவைகளை ஹைவேஸ் இஞ்சினியர் அவர்களிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அதோடு இதற்கென்று ஒரு சூப்பிரன்டெண்டிங் இஞ்சினியர் மாகாணம் பூராவுக்கும் இருக்கின்ற வேலைகளைக் கவனிப்பதற்காக இருக்கிறார். இவர்களுடைய மேற்பார்வையில் தான் மைனர் இரிகேஷன் போன்றவைகளும் இருந்து வருகின்றன. இதில் யாரைப் போட்டிருந்தாலும், இந்த டிப்பார்ட்மெண்டில் எந்த இஞ்சினியரைப் போட்டாலும் அவர்கள் செய்யக் கூடியதைத்தான் செய்வார்கள். என்னுடைய அபிப்பிராயம் அவரைச் சென்னைப்பட்டிணத்தில் இல்லாமல் ஸ்டேட்டில் மத்திய இடத்தில் வைத்தால், ஏனென்றால் கிராமங்களின் முன்னேற்றத்தைக் குறித்து செய்யக்கூடிய விஷயம், அடிக்கடி ரொம்ப தூரம் போக இல்லாமல் செய்யக் கூடியதாக இருக்கும். அந்த ஆபீஸர், அவர் டிபார்ட்மெண்ட், ஆபீஸ்கள், சிப்பந்திகள் எல்லாமே புதுக்கோட்டை இல்லாவிட்டால் ராமநாதபுரம் ஜில்லாவில் எங்காவது சென்ட்ரல் ப்ளேஸில் இருக்க வேண்டும்.

இரண்டாவதாக போக்குவரத்து சாலைகள் சம்பந்தப்பட்ட மட்டில் அநேகம் பேர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்தக் குறையைப் பொறுத்த வரையில் சமீபத்தில் நமது சீஃப் செக்ரட்டரி அவர்கள் தஞ்சைக்கு வந்த போது, 'தீவிரமாகச் சொல்வதை உத்தேசித்து இதை மாற்றி அமைக்க

நேரிடலாம், அதை ஆலோசிக்கிறோம்' என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் முடிவாகச் சொல்லவில்லை. ஜனத்தொகை அடிப்படையில் ப்ளாக் பிரிக்கப்பட்டுள்ளது. ஒரு ப்ளாக்குக்கு 75,000 ஜனத்தொகை என்ற அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளது. சில பிளாக்குகளில் பராமரிக்க வேண்டிய கப்பி ரோடுகள் நீளம் ஜாஸ்தியாக இருக்கிறது. "இப்போது கொடுக்ககூடிய ஜனத்தொகை அடிப்படையில் நபர் 1-க்கு 40 நயா பைசா போதாது. இதைக் கொண்டு பராமரிக்க முடிந்த வரையில் வைத்துக்கொள்ளுங்கள். பாக்கி ரோடுகளை பஞ்சாயத்திடம் ஒப்படையுங்கள்" என்று சொல்லியிருக்கிறார்கள். அப்படி பஞ்சாயத்திடம் ஒப்படைப்பதானால் இதுவரையில் இரண்டு ஐந்தாண்டுத் திட்டத்தில் விருத்தி செய்ததும் போய்விடும். ரோடுகள் பராமரிப்பில் 'அதர் டிஸ்ட்ரிகட் ரோட்ஸ்' பற்றிச் சொல்கிறேன். ஸ்டேட்டில் ஒதுக்க யோசனை செய்திருப்பதை இன்னும் கொஞ்சம் ஜாஸ்திப் படுத்தி ரோட்டின் நீளத்தின் பேரில் வகுத்து அந்தந்தப் பஞ்சாயத்து யூனியனுக்கு, அவர்களுக்குக் கீழே வரக்கூடிய ரோடின் நீளத்திற்குத் தகுந்தாற்போல கொடுத்தால் நலமாயிருக்கும். பஸ் ரோடுக்கு கொஞ்ச ரூபாய்—மெயிண்டினன்ஸுக்காக ஒரு மைலுக்கு 100 ரூபாய்—கொடுப்பது போதாது. இதைப்பற்றி சீஃப் செக்ரட்டரியிடம் கூட சொல்லியிருக்கிறேன். இந்த பஞ்சாயத்து ஆக்ட் தஞ்சை ஜில்லாவில் அமுலுக்கு வந்து நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தால் அங்கே ஜில்லா கலெக்டர் ஜாஸ்தி பிரயாசை எடுத்துக் கொண்டு நல்ல முறையில் நடத்திக்கொண்டு வருகிறார். அந்த ப்ளாக் ஆபீஸர்களுக்கெல்லாம் கூட ஹைதராபாத்தில் ட்ரெனிங் ஆகியிருக்கிறது. ரெவின்யூ டிபார்ட்மெண்டிலிருந்து ரெக்ரூட் ஆனாலும் வேறு டிபார்ட்மெண்டிலிருந்து ரெக்ரூட் ஆனாலும், எல்லோருக்கும் ட்ரெனிங் கொடுத்து ஸ்கீமேடிக் பட்ஜெட் எப்படிப் போடுவது, திட்டம் போடுவது எப்படி என்றும் எல்லாவற்றிலும் ட்ரெனிங் ஆகி வந்திருக்கிறார்கள். வேண்டுமானால் டீஸெண்ட்ரலைசேஷன் வேண்டுமானால் எல்லாவற்றையும் கிராமத்தில் ஒப்படைக்கவேண்டும் என்று சொன்னால், அதற்குத் தகுந்தவர் இருந்து பராமரிக்க வேண்டும். "அதிகாரிகளுக்கு பவர் கொடுக்க யோசனை இருக்கிறது. எல்லா அதிகாரமும் அதிகாரிகளுக்கே கொடுத்திருக்கிறார்கள், அதிகாரிகள் செய்கிறார்கள்" என்று சொல்லிக்கொண்டே இருக்காமல் அதிகாரிகளுடைய ஒத்தாசையின் பேரில் நாமும் ஒத்துழைத்து அரசியல் கட்சி மனப்பான்மையை கிராம முன்னேற்றத்தில் கொண்டுவராமல் பஞ்சாயத்து சட்டத்தை நிறைவேற்றினால் நல்ல முறையில் நடக்கும். மக்களுக்கு நன்மை நிச்சயம் ஏற்படும். வீண் புகார் சொல்லிக்கொண்டே இருப்பது முறையல்ல. இதில் தஞ்சை ஜில்லா சம்பந்தப்பட்ட வரையில் ஒரு தனிப் பிரச்னை இருக்கிறது. தஞ்சை ஜில்லாவை விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்காக பாக்கேஜ் டீல் ப்ரொக்ராமில் சேர்த்திருக்கிறார்கள். இதற்கு ஒவ்வொரு பிளாக்கிலும் கிராமங்களைப் பொறுக்கி எடுப்பதில் 20 சதவீதம் பொறுக்கி எடுக்கவேண்டும் என்று இருக்கிறது. எல்லா கிராமத்திலும் பரவலாக இல்லாவிட்டாலும் ஒவ்வொரு கிராமத்திலும் இல்லாவிட்டாலும் ப்ளாக்கில் நான்கு இடங்களிலாவது இந்த ஏரியா (Area) இருந்தால் தான் என்னென்ன செய்கிறார்கள் என்று எல்லோருக்கும் தெரிந்து விவசாய உற்பத்தியைப் பெருக்க முயற்சிக்க முடியும். அந்த நிலையில் இல்லாமல் ஒரு மூலையில் ஆரம்பித்து (contiguous) கண்டிகுவஸ்ஸாக போகவேண்டும் என்று சொன்னால் தங்களுடைய கிராமங்களுக்கு வருமோ வராதோ, மொத்தம் 60 சதவீதம் தானே என்று பொது மக்களிடத்தில் அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. இதில் என்ன உத்திரவு இருந்தாலும் அரசாங்கம் செலக்ஷன் செய்வதில் சரியாகக் கவனம் செலுத்தி பரவலாக விஸ்தீரணம் நிர்ணயிக்க வேண்டும். பட்டுக்கோட்டை ப்ளாக்கில் செலக்ஷன் செய்வதைப் பற்றி அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிறேன். இன்னும் உத்திரவு போடவில்லை. பரிசீலனையில் இருக்கிறது என்று லெட்டர் மட்டும் வந்திருக்கிறது. ஆகவே இதில் நல்ல முறையில் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதே நேரத்தில் லோகல் டெவலப்மெண்ட் ஸ்கீம் சம்பந்தமாக ஒரு சிக்கல் இருக்கிறது. ஃபர்ஸ்ட் ஸ்டேஜ் (First stage) ப்ளாக்காக இருந்தால் எல்.டி. ஸ்கீம் கிடையாது. ஜில்லா போர்டு கிராண்ட் கிடையாது, "ப்ளாக்குக்குப் பணம் கொடுத்திருக்கிறதே பார்த்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லு

24th March 1961 ] [Sri R. Srinivasa Iyer]

கிறார்கள். 1955-ல் கிராம மக்கள் நாலில் ஒரு பங்குப் பணம் கட்டியாகி விட்டது. ஏற்கனவே தஞ்சை ஜில்லாவில் போட்டிருக்கிறப்படி ப்ரயாரிட்டி லிஸ்ட் போட்டு ரோடைப் போட்டுவிட்டால் வேறு ஒன்றும் மக்கள் கேட்க மாட்டார்கள். ரோடு டெவலப்மெண்ட் ரொம்ப முக்கியமானது. போக வர சீராக வசதி செய்து கொடுத்தால் இதர வசதிகளைக் கூட கேட்க மாட்டாாகள். ரோடு போட்டுவிட்டால் சினிமா, மார்க்கெட், ஆஸ்பத்திரி முதலிய வைகளுக்குப் போக வசதி ஏற்படும். மக்களுக்கு பஸ்ரூட், ரோடு இரண்டும் தான் வேண்டும். முன் சொன்னபடி 1955-ல் ஆகஸ்டு மாதத்தில் பணம் கட்டியிருக்கிறது. பிற்பாடு முதல் ஸ்டேஜ் ப்ளாக்காக ஆகி விட்டதால் அதை எடுத்துக்கொள்ள முடியாது என்று சொல்கிறார்கள். கட்டிய பணமும் திரும்பி வரவில்லை. வேலையும் நடக்கவில்லை. பணம் இல்லை என்கிறார்கள். பணம் வேண்டுமென்றால் அதிகப்படி பணத்தை எப்படிச் சேர்ப்பது என்பது ஃபைனான்ஸ் (Finance) டிபார்ட்மெண்டுக்குத்தான் தெரியும். எந்த வகையில் திரட்டலாம் என்பது அவர்களுக்குத்தான் தெரியும். 'வரி போட பவர் கொடுத்துவிட்டோமே, 25 சதவீதம் வரையில் 116-வது செக்ஷன்படி (Local Cess Surcharge) போட்டுக்கொள்ளுங்கள்' என்று சொன்னால், முன்பு 35 நயா பைசா செஸ் இருந்ததை இப்போது 45 நயா பைசாவாகப் போட்டாகிவிட்டது. லோகல் செஸ் சர்க்காரும சேர்ந்து லாண்ட் ரெவின்யூ வோடு 60 நயா பைசா போட்டு 1 ரூபாய்க்கு 70 நயா பைசா வீதம் சேர்த்து வசூல் செய்யவேண்டும், அதுவும் இந்த வருஷத்திலேயே, வருஷக் கடைசியில் போட்டு, ஒரேடியாக வசூல் செய்து ரோடுக்கும், கல்விக்கும் செலவு செய்வதென்று சொன்னால் ரொம்பவும் பொது மக்களிடையே மனத்தாங்கல் ஏற்படுகிறது. பணம் இல்லாத காரணத்தினால் டெவலப் செய்யவில்லை. உதாரணமாக பட்டுக்கோட்டை பஞ்சாயத்து யூனியனை எடுத்துக் கொண்டால் 49 மைல் கிராவல் ரோடு இருக்கிறது. ஜனத்தொகைக்கு 40 நயா பைசாவைக் கொண்டு இதை மராமத்து செய்வதென்றால் இந்த 49 மைலில் 6 மைல் தான் செய்யலாம். பாக்கி 43 மைல் ரோடை பஞ்சாத்திலும் எடுத்துக் கொள்ளமாட்டார்கள். சர்க்காரிலும் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். வீணாகப் போய்விடும். சில வருஷங்களுக்குப் பிறகு ரோடே இல்லாமல் போய்விடும். வருஷத்திற்கு 975 மைலை எம்.டி.ஆர்.-ஆகச் செய்யப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். 1956-ம் வருஷத்திலிருந்து ஓ.டி.ஆர்.-ஐ. எம்.டி.ஆர்.-ஆக மாற்றி classify செய்யும் விஷயத்தில் பட்டுக்கோட்டையிலிருந்து வடசேரிக்குப் போகும் ரோடை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் பின்னும் பல ரோடுகளைப்பற்றியும் சிபார்சு செய்யப் பட்டிருந்தும் முடிவு செய்யப்பட்டு எடுத்துக் கொள்ளப்படவில்லை. இன்னும் இந்த ரோடு ஓ.டி.ஆர்.-ல் இருக்கிறது. 956-லிருந்து சர்க்காரில் பெண்டிங்கில் இருந்தது. இப்போது அந்த ரோடை 'ஓ.டி.ஆர். ஆகையால் பஞ்சாயத்து வைத்துக்கொள்ளவேண்டும்' என்று சொல்வது நியாயமல்ல. சென்ற பல வருஷங்களாக பஸ் ரூட்டாக இருக்கிறது. எப்போது எம்.டி.ஆர்.-ஆகச் செய்யவேண்டுமென்று சிபார்சு செய்யப் பட்டதோ அந்தத் தேதியிலிருந்து அது எம்.டி.ஆர். என்று சேர்க்கப் படவேண்டும். உடனே அந்தமாதிரி வேண்டுகோளை சர்க்கார் வேண்டு கோளாகக் கருதி சர்க்கார் நேரில் பராமரிக்க வேண்டும். இன்னொன்று இந்த ரோடு பராமரிப்பே பஞ்சாயத்து கவுன்ஸிலுக்கு வேண்டாம் எல்லாவற் றையும் சர்க்காரிலேயே எடுத்துக்கொண்டு;, பணத்தையும் எடுத்துக்கொண்டு அவர்களே செய்தால் நலமாக இருக்கும். எம்.டி.ஆர், ஓ.டி.ஆர். க்ளாஸி ஃபிக்கேஷன் (Classification) செய்து வைத்திருப்பதை மாற்றிக்கொள் வதில் ரிட்ராஸ்பெக்டிவ் எஃபெக்ட் (Retrospective effect) கொடுத்து சர்க்காரிலேயே பராமரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஏ. பி. ஸி. டி க்ளாஸிஃபிகேஷன் பற்றிச் சொன்னார்கள். பட்டுக் கோட்டை பிளாக்கை ஏ என்று போட்டிருக்கிறார்கள். மிகவும் பிற்போக்கான பல முறை கட்சி பண்ணி சேர்த்திருக்கிறது. ஜனங்களின் எண்ணிக்கை, வரி வசூல் என்ன ஆகிறது, லாண்ட் செஸ் என்ன வரும், சர்சார்ஜ் போட்டால் என்ன வரும் என்று பார்த்து ஏ, பி, ஸி, டி க்ளாஸிஃபி கேஷனை மாற்றி அமைக்க வேண்டும். வேதாரண்யம் ஆவடையார்கோயில் இரண்டை மட்டும் டி என்று போட்டிருக்கிறார்கள். பொருளாதாரத் தன்மையை உத்தேசித்து பாக்வேர்ட் ஏரியாவைக் கவனித்து திருத்தி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதே நேரத்தில் பஞ்சாயத்து யூனியன் ஆபீஸ் வைக்கும் இடத்தைப் பற்றி பெரிய கிளர்ச்சி ஏற்படுகிறது. ஒன்று இதை சர்க்காரே நிர்ணயம் செய்யவேண்டும். அல்லது பஞ்சாயத்து யூனியன் மெம்பர்களிடையே மெஜாரிட்டி மைனாரிட்டிக்கு விடவேண்டும். ஒரு ஊரில் ஆபீஸ் ஏற்பட்டு விட்டால் அந்த ஊர் விருத்தியாகி விடும் என்ற தவறுதலான எண்ணம் ஏற்பட்டிருக்கிறது பிளாக்கில் இந்த இடத்தில் வேண்டும் அந்த இடத்தில் வேண்டும் என்று ஒரு அஜிட்டேஷன், கிளர்ச்சி, சிறு குழப்பம் ஏற்பட்டு அநாவசியமாக சிக்கல் ஏற்பட்டு கடைசியில் பிரயோசனம் இல்லாத இடத்தில் ஆபீஸ் வரக் கூடிய நிலைமை இருக்கிறது. சர்க்காரே அங்குள்ள ஒரு இடத்தைக் குறிப்பிட்டு அந்த இடத்தில் வைக்கவேண்டும் என்று சொல்ல வேண்டும் அல்லது பஞ்சாயத்து யூனியன் கான்ஸ்ட்டிட்யூட் ஆன பிறகு மெஜாரிட்டியில் தீர்மானம் செய்ய விட்டுவிடவேண்டும்.

அதோடு ப்ரைமரி ஹெல்த் சென்டர்களை ஸாங்ஷன் செய்ததில் கட்டிடங்கள் கட்டவேண்டியதைக் கட்டாமல், கட்டிடங்கள் இருக்கக் கூடிய இடங்களில் டாக்டர்கள் போடாமல் சில கிராமங்களில் இருக்கின்றன. இப்போது லைசென்ஷியேட்ஸைக் கூட போடலாம் என்று நேற்று பேப்பரில் பார்த்தேன். தாமங்கோட்டை, பொன்பேத்தி ப்ரைமரி ஹெல்த் சென்டர்களை இயங்கச் செய்யவேண்டும். அனிமல் ஹஸ்பண்ட்ரி டிபார்ட்மெண்ட் சென்டர்களையும் இயங்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

DEPUTY SPEAKER: The hon. Member's time is up.

SRI A. VEDARATHNAM: கனம் துணைத் தலைவர் அவர்களே, 75 ஆண்டுகளுக்கு முன்பு கண்ட கனவு இப்போது நிலைவாகியிருக்கிறது. மக்கள் கைக்கு ஆட்சியை மாற்றுவதற்காக கடந்த 75 ஆண்டுகளின் சரித்திரத்தைப் படித்து அறிந்தவர்களுக்குத் தெரியும் அதனுடைய அருமை. ஏதோ பறந்து வந்து நம்முடைய கையில் விழுந்ததாக யாரும நினைத்துக் கொள்ளமாட்டார்கள். வெள்ளைக்காரன் ஆட்சியிலே இந்த அதிகாரத்தை மாற்றுவதற்காக காங்கிரஸ் மகாசபை எத்தனை ஆண்டுகள், எவ்வளவு தீர்மானங்களை நிறைவேற்றி, எவ்வளவு முறைகளைக் கையாண்ட பிறகு, அவர்கள் இன்ச் இன்சாக அதிகாரத்தைக் கொடுக்க முன் வந்தார்கள். அப்போது ஆட்சி முற்றிலும் வைஸ்ராய்கள் கையிலே இருந்தது. பின்னர் வைஸ்ராய் எக்சிகுடிவ் கவுன்சில் என்று சொல்லி, அதிலே சில மெம்பர்களை ஆலோசனைக்கு எடுத்துக் கொண்டார்களே யல்லாமல், அவர்கள் கூறிய ஆலோசனைகளைக்கூட அந்தக் காலத்தில் அவர்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. ஒரு 10 ஆண்டுக்கு ஒருமுறை ஒரு ரிபார்ம் பண்ணினார்கள். மிண்டோ-மார்லி ரிபார்ம், மாண்டேகு—செம்ஸ்போர்டு ரிபார்ம் என்று இப்படியெல்லாம் படிப்படியாக அதிகார மாற்றம் சொல்லி, அவர்கள் நமது குடுமியை வைத்துக்கொண்டு, அதிகாரத்தை மாற்றுவதாக பாவனை செய்து வந்தார்கள். அப்படி இருந்த நிலைமாறி, இப்போது நாம் பொறுப்பேற்றுக் கொண்டபிறகு, நாம் சுதந்திரம் அடைந்த பிறகு, அரசியல் நிர்ணய சபையில் சட்டமியற்றி 10 ஆண்டுகளுக்கு அந்த அதிகார மாற்றம் மக்கள் கைக்கு வந்தது என்று சொன்னால், பாரதியார் சொன்ன.

"ஓராயிரம் வருடம்
ஓய்ந்துகிடந்த பின்னர்
வராது போல வந்த
மாமணியைத் தோற்போமோ?"

என்பது நினைவுக்கு வருகிறது. எத்தனையோ பெரிய போராட்டங்கள் நடந்தன. அதன் பின்னர் ஆட்சி மக்கள் கைக்கு மாற்றப்பட்டிருக்கிறது. அது ஒரு பெரிய வரப்பிரசாதம் என்றே சொல்ல வேண்டும்.

24th March 1961] [Sri A. Vedarathnam]

நம்முடைய மதிப்பிற்குரிய நண்பர் ஸ்ரீ ஆர். சீனுவாச அய்யர் அவர்கள் சொன்னதுபோல், எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னாலே இயற்றப்பட்ட சட்டங்களைக்கூட கண்டுபிடித்து இப்போது குறைகள் மாற்றப் படுகின்றன. இவ்வாண்டுதான் இந்தச் சட்டம் நிறைவேறி இருக்கிறது. இப்போதுதான் அது அமுலாக்கப்பட்டும் வருகிறது. குறைபாடுகள் இல்லாது முற்றிலும் சிறந்தது என்றோ, அதைக் குற்றமில்லாத சட்ட மென்றோ யாரும் சொல்வதற்கு இல்லை. அந்தச் சட்டத்திலே என்னென்ன குறைபாடுகள் தோன்றுகிறதோ அதை மாற்றியமைப்பதுதான் இந்த சட்டசபையினுடைய வேலை. அதுதான் இப்போது தொன்றுதொட்டு நடந்து கொண்டு வருகிறது. இந்த அதிகார மாற்றம், இந்தப் போராட்டங்களை யெல்லாம் அறிந்து அதிலே ஈடுபட்டவர்கள் கைக்கு அந்த அதிகாரம் கிடைத்ததினால், அதனுடைய பெருமையை அறிந்து, மதித்து அவர்கள் அந்த ஆட்சியை நடத்துகின்றார்கள். அப்படி இல்லாதவர்கள் கையிலே இந்த அதிகாரமானது சிக்கிக் கொண்டால் கஷ்டம்தான். அதை நாளா வட்டத்திலே மக்கள் தெரிந்து கொண்டு யார் கையிலே இந்த ஆட்சியைக் கொடுக்க வேண்டுமோ அவர்கள் கையில் கொடுக்கவேண்டும். அது யாரிடத்திலே இருந்தாலும், அதைச் செம்மையாக உணருகின்ற காலம் வரும் வரையிலும் இந்தக் குறைபாடுகளை பொருத்துத்தான் ஆகவேண்டும்.

மத்திய அரசாங்கத்தினுடைய பொறுப்பு, மாகாண அரசாங்கத் தினுடைய பொறுப்பு, ஜில்லா போர்டினுடைய பொறுப்பு ஆகிய எல்லா பெரிய பொறுப்புகளையும் இப்போது கிராமங்களின் கைக்கு மாற்றப்பட்டி ருக்கிறது. அப்படி மாற்றப்பட்டிருக்கிற காரணத்தாலேயும், அவர்களுக்கு அனுபவம் ரொம்பவும் குறைவாக இருக்கின்ற காரணத்தாலும், இந்த அதிகாரங்களை யெல்லாம் சரியாக செலுத்துகின்றனரா என்பதைக் கண் காணிப்பதற்காகவும், அப்படி அவர்கள் தவறுகின்ற இடத்திலே திருத்து கின்ற அதிகாரம் அதாவது ஹோல்ட் நம்முடைய அரசாங்கத்திற்கு இருக்க வேண்டும். ஏனெனில் ஆரம்ப காலத்தில் 10 ஆண்டு காலம் வரையில் மக்கள் நல்லமுறையில் புரிந்துகொண்டு செயலாற்றுவார் களானால், மேலும் பல பொறுப்புகளை மாற்றுவதில் எவ்விதத்திலும் தவறு இல்லை. அதுவரையிலும் எங்காவது தவறு செய்து, அதனால் மக்களுக்கு அதிகத் தீமை நேருமென்று சந்தர்ப்பம் வருகிற காலத்தில், அதைச் சீராக நடத்துகின்ற பொறுப்பை இந்த அரசாங்கம் கையிலே வைத்துகொள்ள வேண்டுமென்பதை நான் இந்த சந்தர்ப்பத்திலே குறிப்பிட விரும்புகிறேன்.

முக்கியமாக கிராம பஞ்சாயத்துக்கு இந்த அதிகாரம் முழுவதையும் கொடுப்பதுதான், அந்தந்த கிராமத்திலுள்ள மக்கள் அவரவர்களுடைய தேவைகளைச் செய்து கொள்வதற்கு முடியுமே தவிர, கிராம சம்பந் தமான விஷயங்களைக் கவனித்துக்கொள்ளும் அதிகாரத்தை பஞ்சாயத்து யூனியனுக்கு கொடுத்தால்கூட, அது சென்ட்ரலைசேஷன்தான் ஆகும். இதை இந்த இடத்தில் நான் குறிப்பிட விரும்புகிறேன். ஒரு கிராமத் திற்குத் தேவையான வசதிகளை யெல்லாம், அந்தக் கிராமத்துப் பஞ்சாயத்து தான் முடிவு செய்யவேண்டும். அந்த கிராமத்து பஞ்சாயத்து தலைவரும் அதிலுள்ள உறுப்பினர்களுமே அங்குள்ள மக்களிடத்தில் வாக்குப் பெறுகிறவர்கள். அவர்கள்தான் அவர்களுடைய தேவையை உணர்ந்து உணர்ந்து செய்யக்கூடியவர்கள். ஆகவே அதைக்கொண்டு வந்து பஞ்சாயத்து யூனியன் கையிலே கொடுப்பார்களானால், அந்த அளவுக்கு அது சென்ட்ரலைசேஷன்தான் ஆகும். அந்த கிராமவாசிகளுக்கு இந்த பஞ்சாயத்து யூனியனால் அவர்களுடைய தேவையை உணர்ந்து காரியங் கள் செய்ய முடியாது. ஆகவே இதிலே இப்படிச் சில விஷயங்கள் இருப் பதை நான் கனம் அமைச்சர் அவர்களுடைய நினைவிற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

கிராமத்திலே இருக்கின்ற கிராமக் குடிதண்ணீர் வசதி, பாசனவசதி, போக்குவரத்து வசதி, கல்வி வசதி ஆகிய இந்த விஷயங்கள் அனைத்தும் அந்தந்த கிராமப் பஞ்சாயத்துக்களுக்கே இருக்க வேண்டும். அப்படி இந்த அதிகாரங்கள் கிராமப் பஞ்சாயத்துக்கு இல்லாமல், பஞ்சாயத்து யூனியனுக்கு

இருக்குமானால், யூனியனிலே போட்டி ஏற்படுகின்ற காரணத்தினால், தன்னுடைய பஞ்சாயத்திற்கு வேண்டிய தேவைகளை ஒரு பஞ்சாயத்து தலைவர் எடுத்துச் சொன்னாலும், அந்த கிராமப் பஞ்சாயத்துக்கு கிடைக்க வேண்டிய உரிமைகள் இல்லாமல் போகக்கூடிய ஒரு வாய்ப்பு இந்த பஞ்சாயத்து யூனியன் கையிலே அதிகாரங்கள் இருப்பதால் நேரிட இருக்கிறது. அந்த வாய்ப்பு இல்லாமல் செய்வது இந்த சட்டத்திலே மிக முக்கியமானது. உண்மையான அதிகாரம் வேண்டுமென்றால், இந்த அதிகார மாற்றம் கிராமப் பஞ்சாயத்துக்களுக்குச் செல்லுவதுதான் முறை. அதிலும், சிறப்பாக கல்வி விஷயத்திலே இது மிகவும் முக்கியம். அதனால்தான் கல்வி மான்யத்தின் போதுகூட நான் நிதியும், கல்வியும் ஒரு அமைச்சரிடம் இருப்பது உலகத்திலே எந்த நாட்டிலும் இல்லாத தனிச் சிறப்பு என்று குறிப்பிட்டேன். அதேமாதிரி, கல்வியும், கிராமப் பஞ்சாயத்துக்கு பதில் சொல்லக்கூடிய வாய்ப்பும் ஒரே இடத்திலே இன்றைக்கு இருப்பதும் ஒரு தனி விசேஷம்தான் என்பதை இந்த நேரத் திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

கல்வி இலாகாவிலே இப்போது நாம் ஏற்படுத்தி இருக்கிற எஸ்.ஈ.ஓ. அவர்களுக்கும் ஒரு சரியான இடத்தைக் கொடுத்து கோ-ஆர்டினேஷனோடு ஒத்துழைக்க வேண்டியது மிகவும் முக்கியமான விஷயமென்பதை அவர் களுக்கு நான் நினைவுபடுத்த விரும்புகிறேன். இந்த எஸ். ஈ. ஓ. க்களை யெல்லாம் இப்போது ஏதோ ஒரு மார்க்கு குறைந்த மாதரி சமத்துவமாக மதிக்கக்கூடிய ஒரு நிலைமை இன்னும் கல்வி இலாக்காவால் நீடித்து வரப்படுகிறது. இப்படிச் சொல்வதால் குற்றம் சாட்டுகிறேன் என்று நினைக் கக்கூடாது. இருக்கின்ற முறைபாட்டை உணர்ந்து திருத்துங்கள் என்றுதான் சுட்டி காட்டுகிறேன். ஆகவேதான் இதை இங்கே கூறுகின்றேன்.

அதோடு, ஒரு கிராமத்திற்கு கல்வி வசதியும், குடிதண்ணீர் வசதியும் அல்லது வேறு எந்த வசதி வேண்டுமானாலும் கிராமப் பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியனிடம் சென்று கேட்கின்ற நிலைமை இருக்குமானால், அது அங்குள்ள மக்களுக்கு அளிக்கப்படுகின்ற உண்மையான ஆட்சியாகாது. அந்த அதிகார மாற்றம் சரியான முறையிலே மக்களுக்குப் போய் சேறும்படி செய்ய வேண்டிய குறைபாடு இந்தச் சட்டத்திலே இருக்கிற தென்றே நான் நினைக்கிறேன். அதைக் கவனித்து அதற்கு வேண்டியதைச் செய்வார்கள் என்று நான் கருதுகிறேன்.

அதோடு, இந்தச் சட்டத்திலே நிர்வாகச் செலவு அதிகமாக இருக்கிறது. நாம் கொடுக்கக்கூடிய தொகையிலே கிட்டத்தட்ட பாதிக்கு நிர்வாகச் செலவு ஆகிறது என்பதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வருகின்றேன். அதோடு அவர்கள் அதைக் கவனிக்க வேண்டு மென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

கிராமங்களிலே பல கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. அது சரியான நிபுணர்களின் ஆலோசனையின் பேரில், இந்த இடத்தில் ஆரம்பித்தால் நல்லதா, அந்த இடத்ததில் ஆரம்பித்தால் நடைபெறுமா என்பதை யோசித்து, அதன்பேரில் ஏற்படுத்தப்பட வேண்டுமென்று கூறிக்சொள்ள விரும்புகிறேன். ஏனென்றால், பொருத்தமில்லாத இடங் களிலே சில தொழில்கள் அதற்கு வேண்டிய இயற்கை வசதிகள் இல்லாத இடத்தில் ஆரம்பிக்கப்பட்டு. ஒரு ஆண்டு காலம்கூட நடைபெறுமல் இருக்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. அப்படி ஏற்படுவதால், அங்கே செலவு செய்யப்பட்ட பணம் விரயமாக்கப்படுகிறது. அப்படியில்லாமல், அந்தச் சூழ்நிலைக்குத் தகுந்தமாதிரி அந்தந்த இடங்களில் தொழில்களை ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து, மூடக்கூடிய நிலைமையால் பணம் செலவழிக்கப்பட்டு ஆரம்பித்தும், விரயமாக்கப்பட்டதே என்று மக்கள் அதை ஒரு பெரும் சுமையாகக் கருதுகிறார்கள். இப்போது கிராமங்களில் யெல்லாம் ஒரு பெரிய விழிப்பு ஏற்படுகின்றது. இப்பொழுதான் மக்கள் சுயராஜ்யம் என்றால் என்ன என்பதை உணர ஆரம்பித்திருக்கிறார்கள். இதை நல்ல மனதோடு அவர்கள் ஆதரிக்கிறார்கள். ஆனால் எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் இதை ஏதோ கட்சிப் பிரசாரத்திற்காகச் செய்கிறார்கள் என்று கூறுவது மனதை ரொம்பவும் புண்படுத்துகிறது.

24th March 1961] [Sri A. Vedarathnam]

எதை எடுத்தாலும் அவர்கள் கட்சிப் பிரசாரம் என்று சொல்லுகிறார்கள். இந்த நாட்டில் சுயராஜ்யமே ஒரு கட்சிப் பிரசாரம் என்று சொல்லிச் சொன்னால், அதை ஒட்டிய விஷயம் முழுவதும் கட்சிப் பிரகாரம் என்று சொன்னால், அது சரியல்ல. அம்மாதிரி அல்லாமல், ஆக்க முறையிலே இருக்கின்ற குறைபாடுகளை அவர்கள் சுட்டிக் காட்டுவதை வரவேற்கிறோம். அதைத் தான் ஆளும் கட்சியிலுள்ள உறுப்பினர்கள் கூட எடுத்துக்காட்டி இருக்கிறார்கள். அந்தத் துறையிலே எதிர்க் கட்சியினர் ஒத்துழைக்க வேண்டுமென்று நான் அவர்களைக் கேட்டுக்கொண்டு இந்த மான்யத்தை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

**Sri A. GOVINDASAMY :** சட்ட மன்ற துணைத் தலைவர் அவர்களே கிராம அபிவிருத்தி விஷயமாகக் கோரப்பட்டிருக்கிற இந்த மான்யத்தின் மீது கொடுக்கப்பட்டிருக்கிற வெட்டுப் பிரேரபணையை ஆதரித்துக் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எல்லா பிளாக்குகளும் தேர்ந்தெடுக்கப்பட்டு, அபிவிருத்தி வேலைகள் நடைபெறும் என்று ஏற்கனவே உறுதி அளிக்கப்பட்டு, இப்பொழுது 1961-ம் ஆண்டு காந்தி பிறந்த தினத்தன்று முடியும் என்று கருத்து சொல்லப்பட்டிருக்கிறது. அந்த நாளிலாவது இது பூர்த்தி செய்யப்படவேண்டும். மேலும் காலம் கடத்தக் கூடாது என்று நான் முதன் முதலில் கேட்டுக் கொள்ளுகிறேன்.

சமுதாய நல அபிவிருத்தித் திட்ட பகுதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிற பொழுது, கட்சிக்கண்ணோட்டத்தோடு தேர்ந்தெடுக்கப்படுகிறதுபொழுது, கட்சிக் கண்ணோட்டத்தோடு தேர்ந்தெடுக்கப்படுகிறது என்று நான் தொடர்ந்து சொல்லிக்கொண்டு வருகிறேன். என்னுடைய தொகுதியில் விக்ரவாண்டி, கண்டமங்கலம் பகுதிகள் பிளாக்குகளாக எடுத்துக் கொள்ளப்படவேண்டும் என்று தென் ஆற்காடு மாவட்ட அபிவிருத்தி கவுன்சிலில் சிபாரிசு செய்யப்பட்டு, கலெக்டர் அவர்களும் சிபார்சு செய்திருந்தாலும் கூட மேலாதிகாரிகள் அதைத் தட்டிக் கழிக்கிற நிலைமையைப் பார்க்கிறபொழுது தான் இம்மாதிரி சொல்ல வேண்டியிருக்கிறது என்பதை நான் வருத்தத்தோடு சொல்லிக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன். இந்தத் திட்டம் நல்ல முறையிலே இயங்க வேண்டும். அதற்கு என்னுடைய ஒத்துழைப்பு இருக்கிறது என்பதை எங்கள் மாவட்ட கலெக்டரைக் கேட்டால், பிளாக் டெவலப்மெண்டு அதிகாரிகளைக் கேட்டால் தெரியும். அதை அவர்கள் மறுக்க முடியாது. அமைச்சர் அவர்கள் கூட அதை மறுக்க முடியாது. திட்டத்தைக் கொடுத்தால் ஒத்துழைக்க எதிர்கக்ட்சியினர் நாங்கள் தயாராக இருக்கிறோம். ஒரு சில இடங்களுக்குத் திட்டத்தைக் கொடுக்காமல் இருந்தால், எப்படி நாங்கள் ஒத்துழைப்பது ? என்னுடைய தொகுதியில் வளவனூரில் 25 கிராமங்கள் சேர்ந்து பிளாக்காக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அங்கு அபிவிருத்தி வேலைகள் நல்ல முறையில் நடந்துகொண்டு இருக்கிறது. விக்ரவாண்டி, கண்டமங்கலம் பகுதிகளை எடுத்துக்கொள்ள வேண்டும். சமுதாய நல அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் என்று சிபார்சு செய்யப்பட்ட போதிலும், அந்தச் சிபார்சு தள்ளப்பட்டிருக்கிறது.

அதிகாரம் பரவலாக்கப்பட வேண்டும், கிராம மக்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட வேண்டுமென்ற நோக்கத்தோடு தான் பஞ்சாயத்துச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. மேஜர் பஞ்சாயத்துகளுக்கு 'எக்ஸிகியூடிவ் ஆபீசர்களைப்' போடுகிறோம். ஆனால் கிராமப் பஞ்சாயத்துகளுக்குப் கணக்குப் பிள்ளைகளை செக்ரடரிகளாகப் போடக்கூடிய நிலைமை இருக்கிறது. இதை நான் எதிர்க்கக்கடமைப்பட்டிருக்கிறேன். கணக்குப் பிள்ளைகளுக்கு ஏற்கனவே வேலை அதிகமாக இருக்கிறது. கணக்குப் பிள்ளைகள், மணியக்காரர்கள் சர்க்கார் ஊழியர்கள் என்று கருதி தேர்தலில் நிற்கக்கூடாது. அவர்கள் தேர்தலில் தலையிடக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருக்கிறது. இருந்தும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்துகளுக்கு அவர்களைக் காரியதரிசிகளாகப் போடுவதனால் மேலும் குழப்பங்களையும், சண்டை சச்சரவுகளையும் உண்டாக்கக்கூடிய நிலைமை ஏற்படுமே தவிர, காரியம் ஒன்றும் அவ்வளாக நிறைவேறாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகி

கிறேன். பல இடங்களில் எக்ஸிக்யூடிவ் ஆபீசர்களுக்கு அதிகாரம் அதிகமாக இருப்பதினால், அவர்கள் பஞ்சாயத்து போர்டு தலைவர்களோடு ஒத்துழைக்காத நிலைமையை சுட்டிக்காட்ட முடியும். உதாரணமாக, வளவனூர் பஞ்சாயத்து போர்டு தலைவரோடு அந்த எக்ஸிக்யூடிவ் ஆபீசர் ஒத்துழைக்க மறுக்கிறார். அவர் காண்டிராக்ட் வேலைகளை ஆபீஸ் ஆட்களை வைத்துச் செய்துவிட்டு, காண்டிராக்ட்க்கு விட்டதாகக் காட்டுகிறார். சில பேர்களிடமிருந்து லைசென்ஸ் பணத்தை வாங்கிக் கொண்டு லைசென்ஸை வழங்காமலே இருப்பதாகத் தெரிகிறது. தெருவிலே போடப்பட்டிருந்த ட்யூப் லைட்டை எடுத்து எக்ஸிக்யூடிவ் ஆபீசர் வீட்டிலே மாட்டிக் கொண்டு விட்டார். மெம்பர்கள் கூட்டத்தில் அதைப்பற்றிக் கேட்டால் அதற்குச் சரியான சமாதானம் கிடையாது. காரணம் அவருக்கு அதிக அதிகாரம் இருக்கிறது. பஞ்சாயத்து போர்டு தலைவருடைய அதிகாரத்தை மீறுகிற நிலைமை கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

கம்யூனிடி டெவலப்மெண்டு திட்டம் அகில இந்தியத் திட்டம் என்று சொல்லுகிறார்கள். ராஜஸ்தானிலும் ஆந்திராவிலும் இருக்கக்கூடிய நிலைமை ஏன் இந்த ராஜ்யத்தில் கையாளப்படவில்லை. அங்கு பஞ்சாயத்து சமிதி என்றெல்லாம் ஏற்படுத்தி அதிகமாக மக்கள் பிரதிநிதிகளுக்கு அதிகாரத்தை வழங்கியிருக்கிறார்கள். அம்மாதிரி அதிகாரத்தை இங்கு வழங்க நம்முடைய அமைச்சர் அவர்கள் ஏன் தயங்குகிறார்கள் என்பதைச் சொல்லவேண்டும். எதிர்க்கட்சியினர்கள் ஒத்துழைக்க வேண்டும் என்று சர்தார் வேதரத்னம் அவர்கள் சொல்லுகிறார்கள். நாங்கள் ஒத்துக்கொள்ளுகிறோம். காரியம் நடைபெறுகிற பொழுது எதிர்க்கட்சியினுடைய துணையை நாடு கிறார்கள். காரியம் பூர்த்தியானதும், விழாக்கள் நடக்கிற பொழுது எதிர்க் கட்சியினரை புறக்கணித்து விடுகிறார்கள். போளியனூர் பிளாக்கில் பள்ளிக் கூடத் திறப்பு விழா ஒன்று நடந்தது. அதற்கு என்னை அழைத்திருந் தார்கள். பி.டி. ஓவுடன் ஜீப்பில் அமர்ந்து விழாவிற்கு சென்றேன். இதைப் பார்த்துக் கொண்டிருந்த தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி மேலதிகாரிகளிடம் சொல்லி அந்த அதிகாரியை—ரெங்கசுவாமி ரெட்டியார் என்று பெயர்—மாற்றிவிடும்படி செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட பழிவாங்கக்கூடிய நிலைமை இருக்குமானால், எதிர்க்கட்சியினர் எப்படி ஆக்க வேலையில் ஒத்துழைக்க முடியும்? இந்த விதத்தில் தவறான எண்ணம் போவதற்கு இடம் இருக்கக் கூடாது. அதேமாதிரி கன்னியூர் என்ற இடத்தில் முதல் அமைச்சர் அவர்களும் நானும் ஒரு விழாவிற்கு சென்றி ருந்தோம். குழந்தைகள் விளையாட்டு பூங்கா திறப்பு விழா என்று நினைக்கிறேன். என்னை பூங்காவைத் திறக்கச் சொன்னார்கள். நான் திறந்துவிட்டு வருவதற்குள் முதல் அமைச்சர் அவர்கள் பேசி விழாவை முடித்து விட்டார்கள். என்னை அங்கே பேசுவதற்கே அனுமதிக்கவில்லை. முதல் அமைச்சர் அவர்கள் இங்கே சபையில் இருப்பார் என்று தான் கருதினேன். அவருடைய இலாகா மான்யக் கோரிக்கையைப்பற்றி விவாதம் செய்யும் பொழுது அவர் சபையில் இல்லாமல் இருப்பது பொருத்தமில்லா மல் இருக்கிறது. ஒத்துழைப்புக் கேட்கிறார்கள். உண்மையில் நாங்கள் ஒத்துழைப்புக் கொடுப்பதை நல்ல முறையில் பயன் படுத்திக் கொள்ளுவ தில்லை என்று தான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

பஞ்சாயத்து சட்டத்தை நிறைவேற்றுகிறபொழுது நாங்கள் பல நல்ல திருத்தங்களைக் கொடுத்தோம். பஞ்சாயத்து சட்டம் அவசர அவசரமாக நிறைவேற்றப்பட்டு திணிக்கப்பட்டது. எங்கள் திருத்தம் ஒன்று கூட ஏற்கப் படவில்லை. இது ஒரு பெரிய சட்டம். அப்படியிருந்தும் கூட அவசர அவசரமாக நிறைவேற்றப்பட்டது. திரு. கோபாலசுவாமி ஐயங்கார் அவர்களும், திரு. கிருஷ்ணசுவாமி பிள்ளை அவர்களும் திறமையாகப் பணியாற்றியிருக்கிறார்கள். நான் அதை மறுக்கவில்லை.

ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பஞ்சாயத்து ஏற்படுத்தவேண்டும் என்று நாங்கள் கூறினோம். 7, 8 கிராமங்கள் சேர்ந்திருப்பதன் காரணத் தினால், ஒரு கிணறு வெட்ட வேண்டும், ஒரு 'ஓவர்ஹெட் டாங்கு' கட்ட வேண்டுமென்று சொன்னால் எல்லாக் கிராமங்களிலும் அந்தத் திட்டம் நிறைவேற்ற முடிந்தால் தான் செய்ய முடியும். உடனடியாக ஒரு கிராமத்

24th March 1961] [Sri A. Govindasamy]

தில் நிறைவேற்றுவதற்கு வழி ஏற்படாது. என்னுடைய தொகுதியில் சாலையம்பாளையம், சதாதானப்பேட்டை இம்மாதிரி 5, 6 கிராமங்கள் 5, 6, மைல் சுற்று வட்டாரத்தில் சேர்ந்து இருக்கின்றன. அந்தப் பஞ்சாயத்தில் 7,000 அல்லது 8,000 ஜனத்தொகை இருக்கும். 15 உறுப்பினர்கள் இருக்கிறார்கள். அவர்களை ஒன்றாகச் சேர்ப்பதே கஷ்டமாக இருக்கிறது. ஒரு திட்டம் போடவேண்டுமென்று சொன்னால், 'எங்கள் கிராமத்திற்கு வேண்டும், உங்கள் கிராமத்திற்கு வேண்டும்' என்று ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டு, எந்தத் திட்டத்தையும் நிறைவேற்ற முடியாத ஒரு சூழ்நிலை இருக்கிறது. தனித்தனியாக பஞ்சாயத்தாகப் பிரிக்கவேண்டுமென்று சொன்னால், ரெவின்யூ கிராமங்கள் என்று சொல்லி, பிரிக்காமலே விட்டுவிடுகிறார்கள். இதில் அரசாங்கம் கவனம் செலுத்தவேண்டும்.

பஞ்சாயத்து யூனியன் தலைவர்களுக்கு 'பாடா' பற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள். தலைவர்களுக்கு ரூ. 4·25 என்று குறிப்பிட்டியிருக்கிறார்கள். அதே தலைவர்கள் ஸ்டாண்டிங் கமிட்டிக்குப் போனால், 'பாடா' ரூ. 2·13 என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏன் இந்த நிலைமை என்று நான் கேட்கிறேன். அமைச்சர் அவர்கள் இதற்குத் தகுந்த சமாதானம் சொல்லவேண்டும். எம். எல். ஏ., எம். எல். ஸி. களுக்கு அங்கே போகிற பொழுது 'பாடா' ரூ. 4·25 என்று சொல்லுகிறார்கள். அங்கே போகிறபொழுது இவர்களுடைய அந்தஸ்து குறைந்து விடுகிறதா ? அவர்களுடைய அந்தஸது குறையாமல் பார்த்துக் கொள்ளவேண்டியது அமைச்சர் அவர்களுடைய கடமை. பஞ்சாயத்துகளில் வேலை செய்யக்கூடிய குமாஸ்தாக்களுக்குப் பழைய சம்பளம் ரூ.35–2–65 என்று இருந்தது. இப்பொழுது ரூ. 70–3–105-ஆக மாற்றி அமைத்திருக்கிறார்கள். மற்ற குமாஸ்தாக்களுக்கு பழைய சம்பளம் ரூ. 45-3-60–2 90 என்று இருந்ததை இப்பொழுது ரூ. 90-4-140 என்று மாற்றப்பட்டிருக்கிறது. மற்ற இலாகாவிலுள்ள குமாஸ்தாக்களைப்போல், பஞ்சாயத்துகளிலுள்ள குமாஸ்தாக்களுக்கும் அதே சலுகை அளிக்கப்பட வேண்டும். அவர்களுடைய சம்பளத்தையும் ரூ. 70 என்பதை ரூ. 96 என்று மாற்ற வேண்டும். இல்லையானால், ஏற்கனவே பஞ்சாயத்து குமாஸ்தாக்களுடைய சம்பளத்திற்கும் மற்ற குமாஸ்தாக்களுடைய சம்பளத்திற்கும் ரூ. 10 தான் வித்தியாசம் இருந்தது. அந்த ரூ. 10 'டிபரன்ஸ்' இருக்கும்படியாவது அவர்களுடைய சம்பளத்தை கூட்டப்போட்டுக் கொடுக்க வேண்டும் என்று இந்த நேரத்தில் கேட்டுக் கொள்ளுகிறேன். கிராம அதிகாரிகள் முகாம் என்று மூன்று நாள் நடத்தப் படுகிறது. மிக வெற்றிகரமாக நடத்துகிறார்கள். ஆனால் அது பெயரளவில் தான் முகாமே தவிர, மற்றபடி அதிகாரிகள் சரிவரக் கலந்து கொள்வதில்லை. நற்சாட்சிப் பத்திரம் வழங்கும்போது மட்டும் அவர்கள் அங்கே வருகிறார்கள். மற்ற சமயத்தில் அவர்களை அங்கே காண முடிவதில்லை. சில ப்ளாக்குகளில் பார்த்திருக்கிறேன். கொட்டகை மாத்திரம் இருக்கும். அதிகாரிகள் யாரும் இருக்கமாட்டார்கள். மேலும் இன்னும் சில முகாம்களுக்கு ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் அங்கத்தினர் எல்லோரும் அழைக்கப்படுகிறார்கள். ஆனால் மற்ற கட்சியைச் சேர்ந்தவர்கள் அழைக்கப்படுவதில்லை. (குறுக்கீடு) நான் பார்த்ததைச் சொல்லுகிறேன். அம்மாதிரி யில்லாமல் உள்ள எல்லாக் கட்சிக்காரர்களுக்கும் சந்தர்ப்பம் அளிக்கும் முறையில் அதைச் செய்ய வேண்டும் என்பதுதான் என் நோக்கம்....

(அடுத்த அங்கத்தினர் அழைக்கப்பட்டார்.)

SRI D. S. AUTHIMOOLAM : மிஸ்டர் டெபுடி ஸ்பீக்கர், ஸார், இந்த டிமான்டின் பேரில் பேசுவதற்கு ஆட்களே காணவில்லையே என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினருக்கு அந்தக் கவலை வேண்டியதில்லை.

SRI D. S. AUTHIMOOLAM : முக்கியமாக எதிர்க் கட்சியில் ஒரு ஆளையும் காணவில்லையே என்று அதற்காகவே கனம் உதவி சபாநாயகர் அவர்களைக் கேட்டேன். நல்ல வேளையாக நண்பர் கோவிந்தசாமி பேசினார்கள். எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், ஜாஸ்தி பேசவேண்டும்

என்று அக்கறையோடு கவனித்துக் கொண்டு வரவில்லை. சரி கேட்போம் என்று கேட்டேன். ஆகவே சொல்லவேண்டியதை ஓரளவு சொல்லு கிறேன். இந்த டிமாண்டில் ஐந்து கோடி ரூபாய் 300 சொச்சம் ப்ளாக்கு களுக்கும் கொடுக்கப்படவிருக்கறது. நேற்று வெளியிட்ட ஒரு அறிக்கையில் கிராம அபிவிருத்தி, ஸ்தல நிர்வாவகத் துறை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, இதில் பல காரியங்களைச் செய்யப் போகிறார்கள். மக்களை மனிதனுகச் செய்வதற்காக எல்லாக் காரியங்களும் செய்யப் படவேண்டும் என்ற குறிக்கோளோடு, சட்டம் போட்டு நிறைவேற் றப் பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட சட்டத்தின் கீழ், கிராம அபிவிருத்திக் காகவும், ஜனங்கள் நன்மைக்காகவும், வேண்டுமானால் முனிசிபல் ஜனத் தொகையை தள்ளிவிடுங்கள். 2½ கோடி மக்களுக்கு இந்த ஐந்து கோடி தானு என்று பார்த்தால், அது அவ்வளவு பொருத்தமில்லை என்று தான் தோன்றுகிறது. ஏனென்றால், தோட்டத்தில பாதி கிணறு, என்று சொல்லுவார்கள்; அந்த மாதிரி, இங்கே உள்ள டிபார்ட்மெண்ட் செலவு கிட்டத்தட்ட 5 கோடியில், ஒரு 3½ கோடியாவது ஆகிவிடும் என்று நினைக்கிறேன். எஸ்டாப்ளிஷ்மெண்ட் செலவு, மற்றபடி ஜீப் நிர்வாகச் செலவு, மற்றும் ஆபீசர்கள் வெளியே ட்ரெயினிங்குக்குப் போவது, பஞ்சாயத்துத் தலைவர்களுக்கு ராஜ்யம் பூராவும் சுற்றுப்பிரயாணம், அகில இந்தியப் பிரயாணம், அதுதவிர ஒரே பாரபர்னேலியா, ஆடம்பரம் இதற் கெல்லாம் சேர்த்துப் பார்ததால், இந்த ரூபாய் காணவே காணுது. ஆகவே, சர்க்கார் உண்மையில், ஜனங்களுக்கு கிராம மக்களுக்கு அநேக நன்மைகளைச் செய்யவேண்டுமானால், இரண்டு காரியங்களைச் செய்ய வேண்டும், இந்த மானியக் கோரிக்கையில். ஒன்று, இந்த மானியக் கோரிக்கையில் பாதி யளவு கூட்டி, ஏராளமான ரோடு வசதிகள், மற்றும், பள்ளிக்கூடக் கட்டடவசதிகள், விவசாயிகளுக்கு வேண்டிய இன்னும் கடன் வழங்கல் எல்லாவற்றையும் ஜாஸ்தியாக்க வேண்டும்; இரண்டாவது, இந்த டிபார்ட்மெண்டை ஓவர்ஹால் பண்ண வேண்டிய அவசியம் ஏற்பட் டிருக்கிறது. ஓவர்ஹால் பண்ணவிட்டால் கஷ்டம். ஆனால், கஷ்டத்தைப் பற்றி அவர்களுக்குக் கவலையில்லை. 62 வரை எப்படியோ நடத்தி விட்டால், அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் இருக்கும். அம்மாதிரி எண்ணம் தானே இந்திய சர்க்காரிலேகூட இருக்கிறது. 62-ம் வருஷ பட்ஜட்டிலும் சர்க்காருடைய காரியங்களை ஜனங்கள் பார்க்கப் போகிறார்கள். ஆனாலும், கஷ்டத்தைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதாகத் தெரியவில்லை இப்பொழுது இந்த டிபார்ட்மெண்டில் அநாவசிய செலவு கள் அதிகமாக, ஏராளமாக இருக்கிறது. அநேக ஸ்லீபிங் ஆபீசுகள், உத்தியோகங்கள் இருக்கின்றனவே, அவைகளையெல்லாம் உடனடியாக ஒரு கமிட்டியாவது போட்டு பரிசீலனை செய்து, அவைகளைக் காலிசெய்தாக வேண்டும். இந்த டிபார்ட்மெண்டில், சில வெல்பேர் ஒர்க்கர்ஸ், சோஷல் எஜுகேஷன் ஆர்கனைசர், அதன் பிறகு ஒரு காதி ஆபீசர், ஸ்பின்னிங் ஆர்கனைசர் என்று ஒருவர், அதன்மேல் மட்டத்திலே, காதி எக்ஸ்டென்ஷன் ஆபீசர், என்ற பதவி இருக்கிறது. ஸ்பின்னிங் ஆர்கனைசர் வேலையை ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீசரே அவர் டைரியைச் சரிபார்த்து வேண்டியதைச் செய்து கொள்ளலாம். காதி எக்ஸ்டன்ஷன் ஆபீசர் பதவி எதற்கு என்று தான் புரியவில்லை. அதைச் செய்யவில்லை. ஏன்? ஜனங்களுடைய வரிப் பணத்தைச் ஒழுங்காகச் செலவழிப்பதில் சிரத்தை எடுக்கிறதில்லை நம்நாட்டு சர்க்கார் ஒரு ரிபோர்ட்டில் படித்தேன். 51—52-ல் நம் இந்திய சர்க்காரின் 14, 15 மாநிலங்களையும் கொண்ட யூனியன் சர்க்காரின் நிர்வாகச் செலவு 48 கோடி ரூபாய்; அதுவே இன்றைக்கு 57–58-ல் சுமார் 192 கோடி. இதற் கெல்லாம் என்ன காரணம்? எதிர்க் கட்சி மெட்ருஸில் இல்லவே இல்லை என்று வைத்துக் கொள்ளுவோம். பார்லிமெண்டில் இருக்கிறது. எதிர்க் கட்சிகளெல்லாம் சேர்ந்து என்ன சொல்லுகின்றன என்றால் சமுதாய நலத் திட்டம், தேசிய அபிவிருத்தித் திட்டம் இவை சம்மந்தமான டிபார்ட் மெண்டுகளிலே முக்கியமாகத் தங்களுடைய கட்சிக்காரர்களை, கட்சியைச் சேர்ந்தவர்களை நியமித்து அவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று இந்த டிபார்ட்மெண்டைப் புதிதாகக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று 100-க்கு 100 அப்படி என்று சொல்வது தப்பு, ஆனால், 50 பர்செண்ட் சொல்லலாம். பாதியளவுக்கு அப்படித்தான் என்று சொன்னால் பொருந்தும். உத்தியோகங்கள் தியாகிகளுக்கு, தேசத்திற்கு பாடுபட்டவர்

24th March 1961] [Sri D. S. Athimoolam]

களுக்குக் கொடுத்து உதவி செய்ய வேண்டுமென்றாலும், டிபார்ட்மெண்ட் பூராவும் பிரசாரத்திற்காக தன்னுடைய கட்சி ஆள்களை தேசம் பூராவும் ஏற்படுத்துவது தப்பு. ஆனால் என்ன ஏற்படுகிறது? ஜனங்களுடைய வரிப் பணம் சம்பளம் கொடுப்பதிலேயே பாதி போய்விடுகிறது. அதைப் பற்றி 62-க்குப் பிறகு யோசிக்கலாம் என்று நினைப்பார்கள் போல் இருக்கிறது. பரவாயில்லை. பொருளாதார நிலையில் கட்டுப்பாடுகள் எப்படி வைத்துக் கொள்ளப்போகிறார்கள். முக்கியமாக இந்த மாதிரியான ஊதாரித்தன மான செலவுகளைக் கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

கிராமச் சாலைகள் இந்த 12 வருஷ காலமாக இந்த ராஜ்ய சர்க்காரால் கவனிக்கப்படவில்லை. 12 வருஷ காலமாக ரோடுகள் மராமத்து செய்ய இவர்கள் ஜில்லாபோர்டுக்குத் தகுந்த கிராண்டுகள் கொடுக்கவில்லை. புது ரோடுகளைப் போடுவதற்கு தகுந்த கிராண்டுகள் கொடுக்கவில்லை. அதே நேரத்தில் இந்த 12 வருஷ காலத்தில், எல்லா ஜில்லாக்களிலும், 100 பஸ், 100 லாரிகள் ஓடிக்கொண்டிருந்த இடத்தில் இன்றைக்கு 1000 பஸ்கள், 1000 லாரிகள் ஓடுகின்றன. அவ்வளவு வருவாய் வருகிறது. வருவாயெல்லாம் எங்கே போயிற்று ? அந்தத் தொகையை யெல்லாம் என்னதான் செய்தார்கள் ?

ஏதோ கொஞ்சம் பணத்தைப் போட்டு மண் ரோட்டைப் போடுவது அதுவும், ஒன்றிரண்டு வருஷங்களில் அடியோடு போய்விடும். இப்படியெல் லாம் நாம் உண்மையை எடுத்துச் சொல்கிறபோது நிதி மந்திரிக்கு வேறு கவலை. "என்னடா, இதைக் கொண்டுவந்துவிட்டோமே பணத்திற்கு எங்கே போவது ? புது வரி போடுவதா, என்ன ?" என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். போட்ட ரோடுகள் எல்லாம் நாசமாகப் போகும் படி நீங்கள் செய்துவிட்டீர்கள். நாசமாகப் போகும்படி நீங்கள் செய்து விட்டீர்கள் என்று பாஷை அப்படி வருகிறது. ரோடுகள் மராமத்துக்குப் பணம் கொடுக்காது, அவை நாசமாகப் போகும்படி விட்டுவிட்டீர்கள். இனியும் பலவற்றைச் சும்மா செய்வதாகச் சொன்னால் பணத்திற்கு எங்கே போவது ? உங்களுக்கு வேண்டிய ஆட்களாகப் போட்டு கொள்வதற்கென்று காதி இலாகா, மற்ற இலாகா, எல்லாம் இருக்கிறது. இப்படி இருக்கிற பணத்தையும் வீணாக விரயமாக்காதீர்கள் என்று சொல்லிக் கொள்கிறேன் அப்படிச் செய்தால் கிராம ராஜ்யம், மகாத்மாகாந்தி கனவு கண்ட ராம ராஜ்யம் என்பதாகச் சொல்வது எல்லாம் வெறும் பேச்சாகிவிடும் என்று வணக்கத்துடன் சொல்லிக்கொண்டு என் உரையை முடிக்கிறேன். வணக்கம். 12-30 p.m.

*Sri P. G. KARUTHIRUMAN : கனம் உதவிசபாநாயகர் அவர்களே இச்சபைமுன் இருக்கும்படியான இந்த மானியத்தை வரவேற்று சில வார்த்தைகள் சொல்லலாம் என்று நினைக்கிறேன். எதிர் கட்சியில் இருக்கிற வர்கள் வீணாக நிர்வாகச் செலவு அதிகமாகச் செய்கிறார்கள், வேண்டிய வர்களுக்கு உத்தியோகம் கொடுப்பதற்காகவே இவ்விலாகா இருக்கிறது என்பதாகவெல்லாம் புகார் சொன்னார்கள். குற்றம் சாட்டினார்கள்.

Sri A. GOVINDASAMY : On a point of order, சபைமுன்பு புகார் சொன்னார்கள் என்பதாகச் சொல்வது பார்லிமெண்டரி முறைக்கு ஒத்தது தானா ?

DEPUTY SPEAKER : There is nothing wrong in it.

Sri P. G. KARUTHIRUMAN : நூற்றுக்கு நூறு சரியானது தான். அத்தகைய புகார்களுக்கு, குற்றச்சாட்டுகளுக்கு அர்த்தமே இல்லை. இஷ்டம்போல வேண்டியவர்களை நியமித்துக்கொள்ள வேண்டும் என்பதற் காக சமுதாய நலத்திட்டத்தை சர்க்கார் கொண்டுவரவில்லை. ஒவ்வொரு திட்டத்தையும் போட்டு மூன்றுலட்சம், நான்கு லட்சம் என்று பணம் ஒதுக்குகின்றபோது திட்டத்திற்காக ஒதுக்கப்பட்ட பணத்தில் 20% க்குமேல் நிர்வாகச் செலவு ஆகக்கூடாது என்று வரையறுத்திருக்கிறோம். பாக்கி யுள்ள 80% தொகையையும் மக்களுக்காகவே செலவிடப்படுகிறது. இதை சற்றுக்கூட ஆராய்ந்து பார்க்காமல் பாதிக்குமேல் நிர்வாகச்செலவு ஆகிறது, எழுபது என்பது சதவிகிதம் நிர்வாகச் செலவாகிறது என்றெல்லாம்

குற்றம்சாட்டுவது சரியல்ல. அதையும் தவிர ஆங்காங்கே ஆலோசனைக் குழுக்களை ஏற்படுத்தி அவர்கள் செய்கிற முடிவுகளைத்தான் நிறைவேற்றி வருகிறோம். நமது தேசம் சுதந்திரம் பெற்ற பிறகு நமது நாடு, நமது சமுதாயம் பலவகையிலும் முன்னேற்றம் அடைவதற்கு உண்மையாகத் தரப்பட்ட ஒரு திட்டம் எது என்றால் அது இந்த சமுதாய நலத்திட்டம் தான் என்று சொல்ல வேண்டும். மகாத்மா காந்தி எதற்காகப் பாடு பட்டு சுதந்திரம் வாங்கினாரோ, எந்த மக்களுடைய நன்மைக்குப் பாடுபட் பட்டாரோ அந்த லட்சியம் நிறைவேறுவதற்கு, அந்த அடிப்படைக் கொள்கை நிறைவேறுவதற்கு, காங்கிரஸ் கட்சி செய்திருக்கும்படியான முக்கிய திட்டம் இந்த சமுதாய நலத்திட்டம் ஒன்றுதான் என்று நிச்சய மாகச் சொல்லமுடியும். இதில் சில குறைகள் இருக்கலாம். இருந்தாலும் பட்ஜெட் பொது விவாதத்திலேயே எதிர்கட்சி அங்கத்தினர்கள் எங்கள் பகுதிக்கு சமுதாய நலத்திட்டம் விஸ்தரிக்கப்படவேண்டும் என்று வற்புறுத்தியதிதே இந்த சமுதாய நலத்திட்டத்தினால் மக்களுக்கு அதிக அளவு நன்மை ஏற்படுகிறது என்பதை நிரூபிக்கிறது.

சமுதாய நலத் திட்டம் என்றால் ஏதோ சில கிராமங்களில் பள்ளிகூடம் கட்டுவது என்பது மட்டும் அல்ல. கல்வி வசதி, சுகாதார வசதி, போக்கு வரத்து வசதி என்றால் கிராமங்களில் வாழ்கிற எல்லா மக்களுக் கும், எவ்விதமான வசதிகளையும் செய்து கொடுப்பதற்கு அடிகோலுகிறது. குறிப்பாக இந்தியா தேசம் பூராவிலும் அதிலும் சென்னை ராஜ்யத்திலே இத் திட்டப் பகுதிகளுக்குச் சென்று பார்த்தால் தெரியும். மக்களுடைய வாழ்க்கை வசதிகள் எவ்வளவு சிறப்பாக உயர்ந்திருக்கிறது என்று. கல்வி பெருக வேண்டும், சுகாதார வசதி அதிகரிக்க வேண்டும், போக்குவரத்து பெருக ரோடு வசதிகள் அதிகரிக்க வேண்டும், விவசாய உற்பத்தி பெருகவேண்டும் என்கிற அடிப்படைகளில் எல்லாம் இத்திட்டத்தின் மூலம் பல காரியங்கள் நடைபெறுவதோடுகூட ஒவ்வொருவரும் தங்கள் குடும்பத்தைக் கட்டுப்பாடான முறையில் வைத்துக்கொண்டு எல்லாவித மான நன்மைகளையும் அநுபவிக்க வேண்டும் என்பதற்காக குடும்பக்கட்டுப் பாடு திட்டத்தையும் ஓரளவுக்கு அமுலாக்க வேண்டுமென்பது அடிப்படையான திட்டம். எத்தனை வசதிகள் பெருகினாலும் கூட ஜனப்பெருக்கம் அதிகமாகிக் கொண்டே போனால் அந்த நன்மையை மக்கள் அடைய முடியாது போகும். வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு குடும்பக்கட்டுப்பாடு அவசியம் என்பதையும் இத்திட்டத்தின் மூலம் கிராமப் பகுதிகளில் எல்லாம் வற்புறுத்தப்படுகிறது. விவசாயப் பெருக்கத்திற்கு நிலம் அதிகமாக வேண்டும் என்பது இல்லை. இருக்கக்கூடிய நிலத்திலேயே உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு உரம் அதிக மாக வேண்டும். அதுவும் இன்றைய தினம் கிராமங்களிலே வீணாகிக்கொண் டிருக்கிற மலஜலங்களைப் சேகரித்து கம்போஸ்டு உரமாக்கினால் ஆயிரம் பேர்கள் உள்ள கிராமத்தில் தயாரிக்கப்படுகிற உரம் மட்டும் 200 எக்கரா நஞ்சைக்குப் பயன்படக்கூடிய இருபதாயிரம் ரூபாய் மதிப்புள்ள உரம் கிடைக்கும். கிராம மக்களும் சுகாதார வசதியுடன் வாழ்வதற்கு வழியேற் படும். இப்படி எல்லாவகையிலும் எல்லா வசதியும் பெருகினால் கம்பன் கண்ட ராமராஜ்யம்.

> கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்விமுற்ற
> வல்லாரும் இல்லை, அவை வல்லர் அல்லாரும் இல்லை
> எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வம் எய்தலாலே
> இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ !

என்னும்படியான சமுதாயத்தை அமைப்பதற்கு வழியேற்படும். அதற்கு அடிப்படையாக இருப்பது இந்தச் சமுதாய நலத் திட்டம் என்பதை வற்பு றுத்தி என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI M. A. MUTHIAH CHETTIAR : கனம் உதவிசபாநாயகர் அவர் களே, ஒருசில வார்த்தைகள் சொல்லி முடிக்கிறேன். எல்லாவகையிலும் கிரா மக்கள் முன்னேற்றம் அடையவேண்டுமென்ற நோக்கத்தில் இந்தச் சர்க்கார் செய்துவருகிற காரியங்களை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. இதனால் எவ்வித நன்மையும் கிடையாது என்று சிலர் சொன்னார்கள். அப்படிச் சொல்ல முடியாது. இந்த இலாகா செய்துவருகிற பல நல்ல காரியங்களை

நாம் பாராட்டவேண்டியவர்களாக இருக்கிறோம். முதுகுளத்தூர் தாலூகாவைப் பற்றிச் சொல்லியிருக்கிறேன். இதற்காகத் தனிப்பட்ட முறையில் கோடிக்கணக்கான ரூபாய் செலவழிக்கவேண்டும். என்பது என் கருத்து. நான்கு ஐந்து கோடியாவது செலவழிக்க வேண்டும். இந்த சமுதாய நலத் திட்டத்தை ஐந்தாண்டு, பத்தாண்டு அமுல் நடத்துவது என்று இல்லாமல் தொடர்ந்து நடத்துவதற்கு நிதிஅமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்யவேண்டும். நமது இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு குறிப்பிட்ட தொகையைவிட அதிகமாக டெல்லியில் இருந்து பெற்றதுபோல, இதற்கும் வேண்டிய தொகையைப் பெறுவதற்கு முயற்சி செய்யவேண்டும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே இந்த மான்யக் கோரிக்கையின்பேரில் இதுவரை நடைபெற்ற விவாதத்தில் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பலரும் எடுத்துக்கூறிய கருத்துக்கள், அவற்றில் சில மிகைப்படயிருந்தாலும் மிகைப்பட்டிருப்பதை ஒதுக்கிவிட்டு நியாயமான குறைகள் என்ன இருக்கின்றன என்பதைக் கவனித்து தக்க முறையில் அந்தக் குறைகளைக் கவனித்து அவைகளை நீக்க முன்வரவேண்டுமென்பதுதான் என் முதல் வேண்டுகோள். இந்த இலாகாவிற்கு கோரப்பட்டுள்ள மான்யத்தில் மிகவும் கணிசமான ஒரு தொகை இந்த இலாகாவின் நிர்வாகிகளுக்கும், மற்றுமுள்ள அதிகாரிகளுக்கும் சம்பளமாக கொடுக்கப்படுகிறது என்பதை முதலில் கவனிக்க வேண்டும். இவ்வளவு பெரும் தொகையை செலவழிப்பதன்மூலம் சரியான பலன் நமக்கு கிடைக்கிறதா என்று ஆராய்ந்து பார்க்க இந்த சபைக்கு உரிமையுண்டு. மற்ற இலாகாக்கள் பொதுமக்களோடு எந்தளவில் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கின்றன, இந்த இலாகா எந்தளவு தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறது என்று எண்ணிப் பார்க்குமிடத்து மற்ற இலாகாக்களை காட்டிலும் இந்த இலாகாவைச் சார்ந்த அதிகாரிகள் ஓரளவு மக்களோடு நெருங்கிப் பழகி வருகிறார்கள். மற்ற அதிகாரிகளிடத்தில் மக்களுக்கு இருக்கிற ஒருவகையான அச்சம் இந்த அதிகாரிகளிடத்தில் மக்களுக்கு ஏற்படுவதில்லை. அதற்குப் பதிலாக ஒருவகையான, இவர்கள் தங்கள் தோழர்கள், தங்கள் ஊழியர்கள் என்ற மனப்பான்மை மக்களுக்கு ஏற்பட்டிருப்பது வாஸ்தவந்தான். ஆயினும் இவ்வளவு பெரியதொரு தொகையை நிர்வாகத்திற்கென்று நாம் செலவிடுவது அவசியமா? அல்லது சிக்கனம் கையாளப்படமுடியுமா என்பதை சர்க்கார் நன்கு கவனித்துப் பார்க்கவேண்டும். சர்தார் வேதரத்தினம் அவர்கள் இதைத்தான் குறிப்பிட்டார்கள். ஒன்று சிக்கனம் கையாளப்பட வேண்டும் அல்லது செலவழிக்கிற பணத்திற்கு ஈடாக சேவையாவது திரட்டப்படவேண்டும். அதில் சர்க்கார் கவனம் செலுத்துவது இன்றியமையாதது என்று நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். கிராமங்களிலுள்ள மக்களுக்கு இடையில் அதிகாரங்கள் கிடைக்காமல் இருந்தபோதிலும் இப்பொழுது புதிய பஞ்சாயத்து சட்டம் மூலம் அவர்களுக்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன என்றும் ஓரளவாவது கிடைத்துள்ள அதிகாரங்களை பயன்படுத்தி அனுபவம் பெறுவதன்மூலம் மேலும் அதிகப்படியான அதிகாரங்களைப்பெற்று, நிர்வகிப்பதற்குரிய எதிர்காலம் கிராம மக்களுக்கு ஏற்படும் என்று அந்தத்துறை அதிகாரிகள் பலரும் அவர்களுக்கு உறுதுணையாக இருக்கவேண்டுமென்றும் இங்கு இரண்டொரு அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். கிராமங்களிலுள்ள மக்கள் பலரும் கல்லூரிகளுக்குச் சென்று பட்டம் பெறாதவர்களாகயிருக்கலாம். ஆனால் அவர்கள் வாழ்க்கையில் நல்ல அனுபவம் உள்ளவர்கள் என்பதில் சந்தேகமில்லை. தங்கள் வாழ்க்கை அனுபவத்தைக் கொண்டு அவர்கள் பல நல்ல காரியங்களை சுமுகமான முறையில் செய்துகொண்டிருக்கிறார்கள் என்று நான் குறிப்பாக சுட்டிக்காட்ட விரும்புகிறேன். படித்தால்தான் அல்லது நல்ல வசதியோடு வாழ்ந்தால்தான் அவர்களிடத்தில் நல்ல நிர்வாகத்திறன் இருக்கும் என்று நாம் நினைப்பது இக்காலத்திற்கு சரியானதல்ல, சொல்லப்போனால் எக்காலத்திற்கும் சரியானதாக யிருந்திருக்க முடியாது. கிராமங்களிலுள்ள மக்கள் ஓட்டளித்துத்தான் இன்று இச்சபை அமைந்திருக்கிறது, அவர்கள் வோட்டு அளித்துத்தான் இந்த நாட்டின் பாராளுமன்றம் அமைந்திருக்கிறது. பல மாநில அரசாங்கங்களும் மத்திய அரசும் கிராம மக்களின்

வோட்டைப் பெற்றுத்தான் அமைந்திருக்கின்றன என்று எண்ணிப் பார்க்கிற அளவில் அவர்கள் நல்ல அனுபவம் உடையவர்களாகத்தான் இருக்கிறார்கள். நல்ல பொது அறிவு உடையவர்களாகத்தான் இருக்கிறார்கள். தங்கள் காரியங்களை சரிவர செய்யக்கூடிய அளவிற்கு, அவர்கள் கருத்து உருவாக்கப்படுகிறது, சிந்தனை ஓட்டமும் இருக்கிறது என்ற முடிவிற்குத்தான் நாம் வரவேண்டியிருக்கிறது. ஆகவே புதிய பஞ்சாயத்து சட்டத்தின்கீழ் நாம் கிராம மக்களுக்கு கொடுத்திருக்கக்கூடிய ஒருசில அதிகாரங்களை இன்னும் விரிவுபடுத்த முடியாதா என்று கவனித்துப் பார்க்கவேண்டும். இப்பொழுது அவர்கள் கையில் விடப்பட்டிருக்கிற தரிசு நிலங்கள் மிகவும் கட்டுப்படுத்தப் பட்டவைதான். சுடுகாடு அல்லது இடுகாடு, ஊர்மந்தை என்றளவில்தான் அவர்கள் கையில் விடப்பட்டிருக்கிறதே தவிர ஊரைச் சேர்ந்த பொதுவான நன்கு பண்படுத்தப்பட்டு வேளாண்மைக்கு பயன்படுத்தக்கூடிய தரிசு நிலங்கள் எதுவும் அவர்கள் கையில் விடப்படவில்லை. சாகுபடிக்கு லாயக்குள்ள தரிசு நிலங்கள் ஏராளம் நம் மாநிலத்தில் இருக்கின்றன. 45 லட்சம் ஏக்கருக்குமேல் இந்த தரிசு நிலங்கள் இருந்தபோதிலும் அந்த தரிசுநிலங்கள் சரிவர பயன்படுத்தப்படாமல் இதுகாறும் தரிசாகவேதான் கிடக்கின்றன. தரிசு நிலங்களை விநியோகம் செய்கிற வேகம் போதாது என்று பலமுறை இந்த சபையில் அங்கத்தினர்கள் பலரும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். இதன் வேகத்தை குறித்து சர்க்கார் திருப்தி அடையமுடியாது. பஞ்சாயத்துகள் பொறுப்பில் அவைகள் ஒப்படைக்கப்படுமானால் தரிசு நிலங்களை விநியோகம் செய்கிற அந்த பொறுப்பை சரிவர கிராமப் பஞ்சாயத்துக்கள் நடத்த முடியும் என்று நினைக்கிறேன். கிராமப் பஞ்சாயத்துக்கள் அல்லது பஞ்சாயத்து யூனியன்கள் அந்த தரிசுநிலங்களை விநியோகம் செய்கிற பொறுப்பை அவற்றின் கையில் விட்டு, விளைச்சலை உண்டுபண்ணுகிற பொறுப்பையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி ஏற்பாடு செய்வது மிக மிக அவசியம், என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். அதுமாத்திரமல்ல, பல்வேறு குளம் குட்டைகள் சீர்திருத்தம் செய்யப்படாமல் கிடக்கின்றன. இதுகுறித்து இதற்குமுன் நான பலமுறை இங்கு எடுத்துச் சொல்லியிருக்கிறேன். அவைகளை சீர்திருத்தம் செய்வதிலோ அல்லது புதிய குளம் குட்டைகள் நிர்மாணிப்பதிலோ இதற்கென்று இருக்கிற இலாகா காட்டுகிற வேகம் போதுமானதாகயில்லை. அவர்கள் வேண்டுமானால் நிரம்ப படித்தவர்களாகயிருக்கலாம், அல்லது அதிலுள்ள அதிகாரிகள் திறமையைக் குறித்தோ, அவர்கள் விவேகத்தைக் குறித்தோ நான் இங்கு ஒன்றும் குறைவாக எடுத்துச் சொல்ல விரும்பவில்லை, அதற்கு அவசியமும் இல்லை. பஞ்சாயத்து நிர்வாகத்தில் குளங்கள், குட்டைகளை விட்டால், அவைகளை சீர்திருத்தம் செய்வது அல்லது புதிதாக செய்வதிலோ இந்த பொறுப்பு பூராவும் அவர்களிடம் ஒப்புடைக்கப்படுமானால் உண்மையாகவே அவர்கள் திறமையாக நல்லபடி நாம் எதிர்பார்க்கக் கூடிய வேகத்தைவிட விரைவில் நிறைவேற்றிக் கொடுப்பார்கள் என்று நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். குளம் குட்டைகளை சீர்திருத்தும் பொறுப்புகள் பஞ்சாயத்துகளிடம் விடப்படுகின்றன என்று சொல்லலாம். ஆனால் அவர்களிடம் விடப்படுவது எல்லாம் அதிகாரிகள் நன்கு வடிகட்டிய பிறகு, வேறு இலாகாவினர் நன்கு வடி கட்டிய பிறகு கடைசியில் இந்தக் குளம், குட்டைகள் சீர்திருத்தம் செய்யப்படவேண்டுமென்று அவர்கள் தேர்ந்தெடுத்து விடுகிறார்களே தவிர தேவைப்படும் குளம் குட்டைகளை சீர்திருத்த அவைகள் அவர்களிடம் ஒப்படைக்கப்படவில்லை. ஆகவே இது குறித்து நன்கு ஆராய்ந்து பார்த்து குளம் குட்டைகளை சீர்படுத்துவது, அல்லது புதிதாக நிர்மாணிப்பதானாலும் சரி அவைகளின் பொறுப்பு முழுவதும் பஞ்சாயத்துகளிடம் கொடுக்க வேண்டும்; இதற்கு விசேஷமான நிதிகளையும் பஞ்சாயத்துக்களிடத்தில் ஒப்படைக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். (குறுக்கீடு) கிராம குடிதண்ணீர் திட்டத்தையும், கிராமங்களிலுள்ள சாலைகளை புதிதாக அமைக்கிற திட்டத்தை நிர்வகிப்பதற்காக பஞ்சாயத்துகள் கிராமங்களில் நிதி திரட்ட வேண்டுமென்று கோரப்படுகிறது. நிதி திரட்டுவது குறித்து எனது கருத்து எங்கு முடிகிறதோ அங்கு திரட்டலாம். ஆனால் எல்லாரும் நிதி அல்லது நன்கொடை கொடுத்துத் தீரவேண்டும் இல்லாது போனால் அங்கு சாலைகள் கிடையாது, அல்லது குடிதண்ணீர் வசதி கிடையாது என்று சொல்வது சரியாகுமா என்பதை அரசாங்கம் யோசித்துப் பார்க்க வேண்டும். நல்ல

செழிப்போடு விளங்கக்கூடிய கிராமங்கள் இத்தகைய நன்கொடைகள் கொடுக்க முடியும். ஆனால் உதாரணமாக பல்லடம் பகுதி, தாராபுரம் தாலுகாவில் ஒரு சில பகுதிகள், ஈரோடு தாலுகாவில் ஒரு சில பகுதிகள், அல்லது தென்ஆற்காடு ஜில்லா, ராமநாதபுரம் ஜில்லாவில் உள்ள பகுதி கள் இவைகள் நீர்வளமில்லாது இருக்கிற காரணத்தால் நிலவளமில்லாத கிராம மக்கள், தரித்திரத்தில் ஆழ்ந்து கிடக்கிற கிராமங்கள் ஏராளமாக இருக்கின்றன. அங்கு சாலைகள் அவசியத் தேவையாக இருக்கின்றன. அங்கு பாதுகாக்கப்பட்ட குடிதண்ணீர் வசதி தேவையாகத்தான் இருக்கிறது. அந்தக் கிராமங்களிலும் சாக்கடைத் திட்டங்களும் தேவையாகத்தான் இருக்கின்றன. அவைகளை நிறைவேற்ற நன்கொடை கொடுத்துத்தான் ஆகவேண்டுமென்று கூறுவது சரியாகயிருக்காது என்று தெளிவாக எடுத் துச் சொல்ல விரும்புகிறேன்.

அவர்கள் வேண்டுமானால் வரி போட்டுக் கொள்ளலாம் என்று சொல்லலாம். பிரதேச செஸ், பிரதேச செஸ்-க்கு சர்சார்ஜ் இவைகள் எல்லாம் அவர்களால் போட முடியாமல் இருக்கலாம். இவைகளை போடுவதாக இருந்தால் நல்ல வளமுள்ளவர்கள் கொடுத்துவிடு வார்கள். ஏற்கனவே காய்ந்து கிடக்கின்றவர்கள் இதைக் கொடுக்க முடியாது. அவர்களிடமிருந்து இந்த வரியை பிரிக்கவும் முடியாது. ஆகவே நிலவரியை உயர்த்தினால் அதை மக்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். வீணாக பஞ்சாயத்துக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும் கெட்ட பெயர்தான் ஏற்படும். இப்போது இந்தப் பகுதிகளை எல்லாம் எ,பி,ஸி,டி, என்று நான்கு பகுதியாக பிரித்திருக்கிறோம். இது தவிர, ஈ என்று ஒரு பகுதியை பிரித்து இதன்கீழ் வருகின்ற இடத்தில் 20 சத விகிதம், 30 சத விகிதம் ஒன்றும் கொடுக்க முடியாது. ஆகவே இந்த இடங்களிலிருந்து ஒன்றும் கொடுக்கவேண்டாம் என்றும், அதன் மூலமாக கிடைக்கவேண்டிய தண்ணீர் வசதி, சாலை வசதி இவைகளை எல்லாம் செய்து கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது மிகவும் அவசியமானது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்ததாக, பஞ்சாயத்துகளில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு சம்பள கமிஷன் சிபாரிசுகளின்படி சம்பளம் கொடுக்கப்படவில்லை, அந்த சிபாரிசு கள் ஒன்றும் அமலாக்கப்படவில்லை என்பதை அரசாங்கத்தின் கவனத் திற்கு கொண்டுவர விரும்புகிறேன். இதில் அரசாங்கம் பாரபட்சம் காட்டுகிறார்களா என்று அறிய விரும்புகிறேன். இதில் பாரபட்சம் காட்டு வார்கள் என்று நான் கருதவில்லை. ஏதோ கவனக் குறைவால் விட்டிருப் பார்கள் என்று தான் நினைக்கிறேன். ஆகவே பஞ்சாயத்தில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு சம்பள கமிஷன் சிபாரிசுபடி பின் தேதியிட்டு சம்பள பாக்கியை எல்லாம் சேர்த்துக்கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, தோட்டி தொழிலாளர்களைப்பற்றி குறிப்பிட விரும்பு கிறேன். அவர்கள் என்ன பாவம் செய்தார்களோ தெரியவில்லை, அவர் கள் சமூகத்தில் இந்த வேலையை செய்துகொண்டிருக்கிறார்கள். மனித குலமே வெறுக்கக்கூடிய ஒரு தொழிலை அவர்கள் செய்து கொண்டிருக்கி றார்கள். எல்லோருக்கும் கொடுக்கப்படுகிற ஊதியங்களை எல்லாம் தீர்மா னித்துவிட்டு இவர்களுக்குமட்டும் சம்பள கமிஷனின் சிபாரிசை அமல் நடத்தாமல் இருப்பது மிகவும் பாவகரமானது என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே அவர்களுக்கும் சம்பள கமிஷனின் சிபாரிசை அமலுக்கு கொண்டுவரவேண்டியது அவசியம், அதற்கான ஏற்பாடுகளை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ரசாயன உர விநியோகம் சம்பந்தமாக, ஒவ்வொரு பஞ்சாயத்து மூலமாக இந்த விநியோகம் நடைபெற வேண்டும் என்று சொல்லியிருப்பது அவசியம் என்று கருதுகிறேன். இந்தத் திட்டத்தின் மூலம் ஓரளவுக்கு பரவலாக உரங்களை விநியோகம் செய்ய முடியும் என்றிருந்தாலும், ஒவ்வொரு பஞ்சாயத்துக்கும், வேளாண்மைத் திட்டத்தை வரையறுத்து அதை நிறைவேற்றுவதற்கு எவ்வளவு வேண்

டும் என்பதை பிரித்து அதை கிராம வாரியாக பஞ்சாயத்துத் தலைவரிடம் ஒப்படைக்கவேண்டும் என்ற ஆலோசனையை தெரிவித்துக்கொள்கிறேன். அந்த எண்ணம் அரசாங்கத்திற்கு ஏற்கனவே உண்டு என்று எண்ணு கிறேன். அவ்விதமிருக்குமாயின் இதை விரைவிலேயே அமலாக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பாக, இன்னொரு விஷயத்தை குறிப்பிட விரும்புகிறேன். வட்டார வளர்ச்சி அதிகாரிகளாக இருக்கின்றவர்கள், கிராம சேவக்-களாக இருக்கின்றவர்கள், இது போன்ற மற்ற அதிகாரிகள் இவர்கள் எல்லாம் நல்ல முறையில் வேலை செய்கின்றார்களா என்பதை நன்றாக கண்காணிக்க வேண்டும். வட்டார வளர்ச்சி அதிகாரியாக இருந்தபோதிலும் சரி, கிராம சேவக்-களாக இருந்தாலும் சரி அவர்களுக்கு என்று நிர்ணயிக்கப்பட்ட இடத்தில் அவரவர்கள் இருக்கிறார்களா என்பதை கண்காணிக்க வேண்டும். கிராம சேவக்-கள் கிராமங்களில் வாழவேண்டும் என்று சொல்லப்பட்டிருந் தும் இவர்கள் வேறு பகுதிகளில்தான் இருப்பதை நாம் பார்க்கிறோம். அதேபோன்று வட்டார வளர்ச்சி அதிகாரிகள் கிராமங்களில் சென்று முகாம் போட வேண்டும் என்ற திட்டத்தை கையாளுவதாக தெரியவில்லை. வட்டார வளர்ச்சித் திட்ட காரியாலயத்திற்குள் ஒரு நாள் திடீரென்று புகுந்துவிட்டால் எல்லா அதிகாரிகளையும் ஒரே இடத்தில் பார்க்க முடிகிறது. இந்த நிலைமை மாறவேண்டும். கால்நடை அதிகாரியைப் பார்க்க ஒருவர் பகல் பத்து மணிக்குப் போனால், அவர்கள் காரியாலயத்தில் இருக்கக் கூடாது, வேலை செய்யக்கூடிய இடத்தில்தான் பார்க்க முடியும் என்ற நிலைமை இருக்கவேண்டும். அதே போன்று விவசாய விஸ்தரிப்பு அதிகா ரியை எடுத்துக்கொண்டால், வேலை நேரங்களில் வேலை செய்யக்கூடிய கிராமங்களில் போய்தான் பார்க்கமுடியும் என்ற நிலைமை இருக்க வேண்டும். அவரவர்கள் வேலை செய்யக் கூடிய இடங்களில் போய் அவர்கள் வேலை செய்யவும் இந்த இடத்திலேயே அவர்கள் இருக்கவும் முயலுவார்களேயானால் செலவழிக்கின்ற பணம் இதில் நல்ல பலன் உள்ளதாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கடைசியாக, நான் கூறவிரும்புவது குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைப் பற்றி. இதைப்பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் கூறவிரும்புகிறேன். இப்போதுள்ள நிலைமையில் குடும்பக் கட்டுப்பாடு திட்டம் அமல் நடத்தப்பட வேண்டுமா என்பதை நாம் ஆலோசனை செய்யவேண்டும். புதிய ஜனத் தொகை கணக்கு எடுத்த பிறகு இது தேவையா என்பதைப் பற்றி முடிவு செய்யவேண்டும். மேற்கு வங்காளத்தில் 10 ஆண்டுகளில் 30, 31 சத விகிதம் தான் ஜனத்தொகை அதிகரித்திருக்கிறது. அந்த அளவில் பார்க்கிறபொழுது மற்ற மாகாணங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஜனத்தொகை கணக்கு குறைவான எண்ணிக்கையைத்தான் காட்டுகிறது. அது மட்டுமல்ல, ஆண்களுக்குத் தகுந்த பெண்கள் இல்லை என்பதையும் நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். இந்த நிலைமையில் குடும்பக் கட்டுப் பாட்டுத் திட்டத்தை அமல் நடத்த வேண்டுமா என்பதைப் பற்றி அரசாங்கம் நன்கு பரிசீலனை செய்யவேண்டும். இல்லையென்றால் இது சமூகத்தில் ஒரு பெரிய பிரச்னையாக வந்துவிடும். நான் இதை வேடிக்கையாகவோ விளையாட்டுக்காகவோ சொல்வதாக யாரும் நினைக்கக்கூடாது. குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தை கிராமங்களில் கட்டாயமாக கொண்டு வருவதற்கு கலெக்டர் தூண்டுகோலாக இருப்பார்கள் என்று இந்த அறிக்கையில் சொல் லப்பட்டிருக்கிறது. வட்டார வளர்ச்சி பகுதிகளில் 250 பேர்கள் நிரந்தரமாக மலடாக்கப்படுவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கான தூண்டு தல் செய்யப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது சரியானது தானா என்பதைப் பற்றி நாம் ஆலோசிக்கவேண்டும். பொதுவாக வெளியில் என்னுடைய தொகுதியைப் பொறுத்தளவில் எனக்கு நன்றாகத் தெரியும். பொதுப்படையாக பார்க்குமிடத்து அங்குள்ள மக்கள் இந்தக் கட்டாயத் திட்டத்தை அவ்வளவாக மனதோடு வரவேற்கவில்லை. (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : இதில் நிர்ப்பந்தம் எதுவும் கிடையாது.) நிர்ப்பந்தம் இல்லை என்று அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படி யானால் இதில் ஏன் இவ்வாறு குறிப்பிடவேண்டும். இதைப்

24th March 1961] [Sri P. S. Chinnadurai]

பார்த்தால் கலெக்டர் அவர்கள் இதை நிர்ப்பந்தப்படுத்துவார்கள் என்றுதான் தெரிகிறது. இதன் மூலம் நிர்ப்பந்தம் ஏற்படும் என்றுதான் தோன்றுகிறது. இதில் தூண்டுதல் என்று சொன்னால் எந்தவிதமான தூண்டுதல் என்று தெரியவில்லை. ஆகவே இதற்கான செலவு செய்கின்ற பணம் வீண் என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. இதன்மூலம் பலவிதமான சமுதாய பிரச்னைகள் எழும் என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். பொதுவாக இந்த இலாகா முதலமைச்சர் அவர்களிடத்தில் இருப்பது நல்லதல்ல. இதனால் வீணாக கெட்ட பெயர் தான் ஏற்படும். இதன் காரணமாக நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் கெட்ட பெயர் ஏற்படுவதற்கு வழி ஏற்படக்கூடும். அது மட்டும் அல்ல, பலரும் பலவிதமாக இதைப் பற்றி பேசுவதையும் நாம் பார்க்கிறோம். அதையெல்லாம் நன்கு யோசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

பொதுவாக சமுதாய நலத் திட்டம் நல்ல நோக்கங்களைக்கொண்டுதான் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இந்த நோக்கங்கள் எல்லாம் நல்ல முறையில் நடந்தேறுவதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இங்கு இரண்டு மான்யங்கள் இன்றைக்கு எடுத்துகொள்ளப் பட்டு விவாதத்திற்கு வந்திருக்கிறது. ஒன்று 26-வது—கம்யூனிட்டி டெவலப்மெண்ட். இன்னொன்று 34-வது—நானுவகைகள். இந்த நானுவகை மான்யத்தைப் பொறுத்த வரையிலும் யாருக்கும் அதில் கருத்து வேறுபாடு இல்லை என்று அறிந்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அதிலே வெட்டுப்பிரேரேணைகூட கிடையாது—சம்பிரதாயத்திற்காகிலும். அதிலே இருக்கக்கூடியது இரண்டு ஐடெம்கள். ஒன்று மோட்டார் வெகிக்கிள்ஸ் ஆக்ட் பிரகாரம் முனிஸிபாலிட்டிகளுக்கும் கார்ப்பொரேஷனுக்கும் நஷ்ட ஈடு கொடுப்பது. இரண்டாவது எண்டெர்டெயின்மெண்ட் டாக்ஸை அவர்களுக்குப் பிரித்துக்கொடுப்பது. இரண்டிலும் இந்தச் சபை ஏகோபித்து அந்தக் கொள்கையை ஏற்றுக் கொண்டதற்கு அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன். ஏனென்றால், இது வரையில் மோட்டார் வெகிக்கிள்ஸ் டாக்ஸிலே கொடுக்கும் நஷ்ட ஈடு போதாது என்று சொன்னவர்கள் கூட, இது சரிதான் என்று எந்த விதமான வெட்டுப் பிரேரணை இல்லாமல், ஏன், எந்தவிதமான பேச்சுமே இல்லாமல் இருந்ததற்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மாதிரி ஏகோபித்த அபிப்பிராயமாக ஒரு சில விஷயங்களிலாவது இருக்கிறது என்பதைக் காட்டுகிறது என்று நன்றியுடன் சொல்லிக்கொள்ளுகிறேன்.

அதற்கு அடுத்தது கம்யூனிட்டி டெவலப்மெண்ட் பற்றி வந்திருக்கக் கூடிய மான்யம். அதிலே 642 லட்சம் ரூபாய் இன்றைக்கு ஒதுக்கவேண்டும் என்று நாம் கேட்டிருக்கிறோம். அதிலே முக்கியமாக பல அங்கத்தினர்கள் நிர்வாகத்திற்காக அதிகம் செலவாகி விடுகிறது, அதுவும் மொத்தத்தில் பாதிக்கு மேல் போகிறது என்று வலியுறுத்திச் சொன்னார்கள். அவர்கள் கணக்குப் போட்டுச் சொன்னார்களோ என்னவோ தெரியாது. நான் கணக்குப் போட்டுப் பார்த்தேன். அப்படி கணக்குப் போட்டுப் பார்த்ததில் டெக்னிக்கல் ஸ்டாஃப் உட்பட சம்பளமாகக் கொடுப்பது 23 சதம் தான் வருகிறது. இது தவறு என்று வேறு யாராவது கணக்குப் போட்டுச் சொன்னால் நான் ஒத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். அதிகாரிகளும் கணக்குப் போட்டதில் அந்த அளவுதான் வந்தது. ஏதோ மேலோடியாகப் பார்த்துக்கொண்டு, எல்லாம் நிர்வாகத்திற்கு—சம்பளத்திற்கு—போகிறது என்று நாம் குறை கூறுவது, இதைப் போலவே தான் மற்ற விஷயங்களில் இருந்தாலும், எல்லாம் இப்படித்தான் போலிருக்கிறது என்று அதிகாரிகள் நினைத்துக் கொள்வார்கள்—மக்களும் நினைத்துக் கொள்வார்கள். கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள் சேர்மனுக்கு மட்டும் முதலில் 4 ரூபாய் என்று போட்டுவிட்டு ஸ்டாண்டிங் கமிட்டிக்குப் போன பிறகு 2 ரூபாய் போட்டிருக்கிறீர்களே என்று

கேட்டார்கள். சரியாகப் படித்திருந்தால், அர்த்தத்தைப் புரிந்துகொண்டிருந்தால் அந்த மாதிரி சொல்லியிருக்கமாட்டார்கள். சேர்மனுக்கு எந்த மீட்டிங்குக்குப் போனாலும் 4 ரூபாய் ................தயவு செய்து குதிக்க வேண்டாம்...........படித்து பார்த்து தெரியவில்லை என்றால் தெரிந்தவர்களைக் கேட்டால் அந்தமாதிரி சொன்னது தவறு என்று அவர்களுக்குத் தெரியும்.

**Sri A. GOVINDASAMY** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் உபாத்தியாயர் போல பேசிக்கொண்டிருக்கிறார். அதில் "இன்க்ளூடிங் சேர்மென்" என்று இருக்கிறதே அதற்கு என்ன அர்த்தம்?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : உபாத்தியாயர் போல் பேசுகிறார் என்று சொல்கிறார்கள். அந்த மாதிரி நிலைமையில் என்னை வைத்து விடுகிறார்கள். அதனால்தான் அந்த மாதிரி பேச வேண்டியிருக்கிறது. "இன்க்ளூடிங் சேர்மென்" என்றால் "சேர்மென் ஆ.ஃப் தி ஸ்டாண்டிங் கமிட்டீஸ் அண்டு அதர் கமிட்டீஸ்" என்று அர்த்தம். "சேர்மென் ஆ.ஃப் தி பஞ்சாயத் யூனியன் கவுன்ஸில்" என்று ஆகாது. (குறுக்கீடு) அதன் அர்த்தமே அதுதான். ஆங்கிலம் தெரிந்தவர்களுக்கு இது நன்றாகத் தெரியும். "சேர்மென் ஆ.ஃப் தி ஸ்டாண்டிங் அண்டு அதர் கமிட்டீஸ்" என்பது தான் அர்த்தமேயொழிய இதற்கு வேறு விளக்கம் தேவையில்லை. இது தெரியாத காரணத்தினால் தான் உபாத்தியாயர் வேலையை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது என்று சொல்லிக் கொள்ளுகிறேன். எல்லோருக்கும் ஆங்கிலம் தெரிந்திருக்கவேண்டும் என்று அர்த்தமல்ல. இதைப் போல மற்ற விஷயங்களை தப்பாகப் புரிந்துகொண்டு விவாதம் செய்யும்போது நமக்குள் பேசிக்கொண்டால் பரவாயில்லை. நாம் என்ன விவாதிக்கிறோம் என்று அதிகாரிகள் கவனிக்கிறார்கள், மக்கள் கவனிக்கிறார்கள், பஞ்சாயத்து தலைவர்கள் கவனிக்கிறார்கள். இவ்வாறு கவனிக்கும்போது நம்மைப் பற்றி குறைவாக நினைக்கும் நிலை ஏற்பட்டு விடுகிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு விஷயத்தை கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள். எம். எல். ஏ.க்கு 4 ரூபாய் என்ன, இங்கு கொடுக்கும் வீதமே அங்கும் கொடுக்கவேண்டும் என்று சொன்னார்கள். அவர்களைவிட உயர்ந்தவர்கள், அதுவும் பஞ்சாயத்து யூனியன் தலைவர்களைவிட உயர்ந்தவர்கள் என்ற எண்ணத்தை விட்டால்தான், பஞ்சாயத்து யூனியனின் ஒரு பகுதி என்ற முறையில் நற்பணியாற்ற முடியும். இப்போதே அதிகப் பணம் செலவாகும்போது, பிரயாணப்படி, தினச் செலவுப்படி இதற்காக அதுவும் பஞ்சாயத்து யூனியனில் ஒரு பகுதிக்குப் போகும்போது இதே மாதிரி கேட்பது தவறான கருத்து—தவறான மனப்பான்மை என்று கண்டிக்க விரும்புகிறேன். அவர்களைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன், இதுமாதிரி பஞ்சாயத்து யூனியன் தலைவருக்குமேல் எங்களுக்கு அதிகமாகப் படி கொடுக்கவேண்டும் என்று கேட்பது தவறான கருத்து, அவர்களைவிட உயர்ந்தவர்கள் என்று கேட்பது (குறுக்கீடு) ........ ரொம்ப சந்தோஷம். படியே வாங்காமல் இருப்பது ரொம்ப சந்தோஷம். அதே மாதிரி மற்றவர்களும் வாங்காமல் பின்பற்றவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். வாங்கினாலும் பரவாயில்லை, வாங்காவிட்டாலும் பரவாயில்லை. 'நான் ஒரு எம். எல். ஏ., இவர் பஞ்சாயத்து யூனியன் தலைவர் தான்', என்ற அந்த எண்ணத்தைக்தான் தெரிவித்தார்கள். அங்கு போகும்போது எம். எல். ஏ - ஆக இருந்தாலும் பஞ்சாயத்து யூனியன் சேர்மனுக்குக் கீழே உட்கார்ந்து பணியாற்ற வேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நான் எம். எல். ஏ. என்ற எண்ணத்தில் பஞ்சாயத்து யூனியன் சேர்மனை எரிந்து பேசுவது என்ற நிலைமை ஏற்படுமானால் இப்போதே அந்தச் சட்டத்தைத் திருத்திவிடுவது மேல். அந்த மனப்பான்மை தான் கூடாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். படி வாங்குகிறோமா இல்லையா என்பது முக்கியமல்ல, மனோபாவம் என்ன

என்பது முக்கியம். தயவுசெய்து, எல்லா அங்கத்தினர்களையும் மிக அடிபணிந்து கேட்டுக்கொள்கிறேன், இந்த மாதிரி மனோபாவம் இருக்கு மானால் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலுக்கு உதவியாக இருப்பதற்குப் பதில் பாதகமாக இருக்கும் என்று வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்றைக்கு இந்த பஞ்சாயத்து சட்டம் இங்கு நிறைவேற்றப்பட்டபோது கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள் சொன்ன, அவர்களுடைய கட்சிக்காரர்கள் சொன்ன சில கருத்துக்களை ஏற்றுக்கொள்ளவில்லை என்று சொன்னார்கள். இது தான் அவர்களிடத்தில் இருக்கும் பிடிவாத குணம். எல்லாக் கட்சிக்காரர்கள் ஒப்புக்கொண்டும், இவர்கள் கட்சிக்காரர்கள் கமிட்டி யிலே இருந்தவர்கள் ஒப்புக்கொண்டும், அதை விட்டுக் கொடுத்து வெளியிலே சொல்லும் கருத்தை ஒப்புக்கொண்டால் அது தான் ஜனநாயகமே தவிர, ஒப்புக்கொள்ளாவிட்டால் ஜனநாயகம் அல்ல என்ற மனப்பான்மை இருக்கும் வரையில் ஜனநாயக ரீதியில் இயங்க முடியாது என்பது எனது தாழ்மை யான கருத்து. அது தவறாக இருக்கலாம்—இருந்தாலும் எனது கருத்தை தெரிவித்துக் கொள்ள உரிமை இருக்கிறது. காங்கிரஸ் கட்சி இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து அவர்களுக்கு இருக்கக்கூடிய மெஜாரிட்டியின் காரணமாக இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டது என்று சொன்னால் ஒன்று அவர்கள் விஷயம் தெரியாதவர்களாக இருக்கவேண்டும்—அல்லது விஷயத்தை மறைக்கவேண்டுமென்று பேசுகிறவர்களாக இருக்கவேண்டும். எல்லாக் கட்சித் தலைவர்களையும் கேட்டு விட்டு, எல்லா கட்சிகளின் பிரதிநிதி களையும் கேட்டு விட்டு, அவர்களுடைய ஏகோபித்த அபிப்பிராயம் என்று இப்போதும் நான் சொல்லிக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். அதனால் வேறு கருத்துக்கள் தெரிவிக்கப்படவில்லை என்று நான் சொல்லவில்லை. என்? நானே வேறு கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறேன். எல்லோரும் ஏகோபித்து முடிவு செய்து அந்த அடிப்படையில் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டது. இங்கு வந்து வேறு கருத்துக்களைச் சொல்லி, திருத்தம் கொண்டுவந்து, அந்தத் திருத்தங்களை ஒத்துக்கொள்ளவேண்டும் என்று நினைப்பது தவறு என்று வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு கருத்தையும் கனம் சீனிவாச அய்யர் அவர்கள் சொன்னார் கள். கனம் வேதாத்திரம் அவர்களும் சொன்னார்கள். அது எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் கருத்து என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பஞ்சாயத்துச் சட்டம் வந்து இப்போதுதான் அமுல் நடத்த ஆரம்பித்திருக் கிறோம். பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலெல்லாம் அக்டோபர் மாதம் 2-ம் தேதியிலிருந்து வந்திருக்கிறது. பாக்கி இருக்கும் இடங்களில் கொஞ்சம் இடங்களில் ஏப்ரல் மாதம் 13-ம் தேதி வரை இருக்கிறது. அடுத்து இன்னொரு தேதியில் பாக்கியுள்ள எல்லா இடங்களிலும் வரப்போகிறது. அமுலுக்கு வரும் முன், இதில் அனுபவம் ஏற்படும் முன், பழைய கருத்தையே வைத்துக்கொண்டு, உடனடியாக மாறுதல் செய்ய வேண்டும், இதில் பல தவறுகள் இருக்கின்றன என்று சொல்வதுதவறு. இதில் குற்றங்கள், குறைகள் இல்லை என்று நான் சொல்லத் தயாராயில்லை. ஒரு திட்டத் தைப் போட்டு நிர்வாகத்தில் ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்படும் காலத்தில் ஒரு திட்டத்தைக்கொண்டு வரும்போது நாளைக்கு ஒரு தடவை, தோன்றுகிற போதெல்லாம், சட்ட சபையில் பேசும்போதெல்லாம் மாற்றவேண்டும் என்று வலியுறுத்துவது. ஒரு குழப்ப நிலைமையை ஏற்படுத்துமே தவிர, இருக்கக்கூடிய நிலைமையில் அதை அடிப்படை யாக வைத்து நிர்வாகத்தை நடத்த வேண்டும். தவறுகள் ஏற்பட்டால் ஏற்படுகிற நேரத்தில் அவ்வப்போது திருத்திக்கொள்ள வேண்டும் என்று நான் ஒப்புக்கொள்கிறேன். சில திருத்தங்கள் உடனடியாக செய்ய வேண்டியதாக இருக்கலாம். கனம் அங்கத்தினர் சதாசிவம் அவர்கள் ஒரு கருத்தை எடுத்துச்சொன்னார்கள். இன்றைக்கு ஒரு பஞ்சாயத்தின் தலைவர் இருக்கிறார், அவர் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் மெம்பர் ஆன பிறகு அவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்து நிறைவேறி விட்டால், அவர் பஞ்சாயத்துத் தலைவராக இல்லாவிட்டாலும் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் மெம்பராக இருக்கக்கூடிய நிலைமை இருக்கிறது என்று

சொன்னார்கள். ஒரு பஞ்சாயத்தின் தலைவர் இறந்து விட்டால் அவருக்கு பதில் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலுக்கு வேறு ஒருவரை அனுப்ப இந்த சட்டத்தில் இடம் இல்லை. சில தவறுகள் இல்லையென்று சொல்லவில்லை. அவைகளைத் திருத்த வேண்டும். இருக்கக்கூடிய தவறுகளை எடுத்துச் சொல்லும்போது. அது சரியாக இருந்தால் அதை ஒப்புக்கொள்வதற்குத் தயாராக இருக்கிறேன். அப்படியில்லாமல் மேலெழுந்தவாரியாக சில கஷ்டங்கள் இருக்கின்றன என்று சொல்லக்கூடாது.

இன்றைக்கு இருக்கக்கூடிய பிரச்னை, பஞ்சாயத்துக்கு அதிகாரம் இருக்க வேண்டுமா, பஞ்சாயத்து யூனியனுக்கு இந்த அதிகாரம் இருக்க வேண்டுமா, என்பது. இந்த இரண்டுக்கும் இந்த அதிகாரம் மாற்றப் படும் என்பதையெல்லாம் ஏதோ திடீரென்று உடனடியாக மேலெழுந்தவாரி யாக தீர்மானம் செய்ததில்லை. இதைப் பற்றியெல்லாம் விவாதித்து, இன்றைக்கு இருக்கக்கூடிய அளவிலே என்னென்ன செய்ய வேண்டுமோ, அந்த அளவிலேதான் மாற்றங்களை செய்வதற்காக இந்தத் திட்டத்தை கொண்டு வந்திருக்கிறோம். அதோடு நின்று விடாமல், அதற்குமேலும் அனுபவத்தைப் பார்த்து ஆவன செய்யப்போகிறோம். பஞ்சாயத்து யூனியன் நல்ல முறையிலே இயங்கி, இதிலே அவர்கள் எடுத்துக்கொள்ளக்கூடிய முயற்சியின் காரணமாக நல்லதொரு பலன் ஏற்படுமானால், அப்போது இந்த சபையிலே இருக்கக்கூடியவர்கள் யாராக இருந்தாலும், "நாங்கள் இத் திட்டத்தின் மூலமாக கிராம மக்களுக்கு நல்லதொரு பலன் ஏற்படும்படி செய்தோம்" என்று அவர்கள் சொல்லும்போது, இதைவிட மேலும் அதிகாரப் பொறுப்பை கொடுப்பதற்கு இந்தச் சட்டசபையிலுள்ளவர்கள் என்றைக்கும் தயங்கக் கூடாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எதையுமே இந்தத் திட்டத்தை அமுல் நடத்துவதிலே ஏற்படுகின்ற அனுபவத்தை வைத்துத்தான் செய்ய முடியும். இதற்கும் மேலாக, இதிலே ஏற்படுகின்ற அனுபவத்தால், இதன் மூலமாக பல தீமைகள், தீய பலன்கள் ஏற்படுமானால் இந்த சட்டசபை அதைப் பரிசீலனை செய்வதற்கும் தயாராக இருக்கும். அப்போது இந்த திட்டத்தை இந்த சட்டசபை பரிசீலனை செய்து பார்த்து, அதற்கு ஏற்ற முறையிலே மாற்றியமைப்பதற்கும் தயங்காது. ஆகவே இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையை வைத்துக்கொண்டு, உடனடியாக இந்த அடிப்படையான மாறுதல்களைச் செய்ய வேண்டுமென்று வலியுறுத்திக்கொண்டிருந்தால், அது ஒரு அஸ்திவாரமற்ற, உறுதியற்ற, குழப்பமான நிலையைத்தான் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அதே மாதிரி அதிகாரிகளுக்கும், பஞ்சாயத்து யூனியன் தலைவர்களுக்கும் இருக்கக் கூடிய தொடர்பைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். இது எப்படி இருக்கவேண்டுமென்பதைப் பற்றி நாம் எல்லோரும் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். ஆனால் இதைப் பற்றியும் இரண்டுவித கருத்துக்கள் சொல்லப்பட்டன. இரு கருத்துக்களையும் ஒப்புக்கொள் கிறேன். எல்லா இடங்களிலும் பஞ்சாயத்து யூனியன் தலைவருக்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்பது ஒரு கருத்து. இன்னொரு கருத்து, திராவிட முன்னேற்றக் கழகத்திலுள்ள ஒரு அங்கத்தினரே பட்ஜெட் விவாதத்தின் போது பேசியது. இந்த பஞ்சாயத்துத் தலைவர்கள் எல்லாம் பணத்தைக் கையாடல் செய்கிறார்கள் என்று கூறினார். ஏதோ ஒன்றிரண்டு இடங்களில் இப்படி இருந்திருக்கலாம். ஆனால் பொதுவாகக் கையாடல் செய்கிறார்கள் என்று குற்றம் சாட்டிப் பேசுவது முறையாக பேச வேண்டிய நிலையில் இல்லை.

இதைத் தவிர, திட்டத்தை நிறைவேற்றுவதற்கு பணம் செலவழிக்கப் படுகிறது. இதையெல்லாம் பஞ்சாயத்து யூனியன் தலைவர் செலவழித்தால் தான், கிராமத்திற்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்ய முடியு மென்று ஒரு சிலர் நினைக்கலாம் இதை அதிகாரிகள் இல்லாமலேயே செய்ய முடியுமென்று அவர்கள் நினைக்கலாம். ஆனால் ஒரு சிலர் அம்மாதிரி கூடாது என்றும் கருதுகிறார்கள். கிராமத்திலே இத்தனை கட்சிகள் இருக்கும்போது, இத்தனை படிக்காதவர்கள் இருக்கும்போது, அங்கு முழு

நிர்வாகப் பொறுப்பையும் ஒரு குறிப்பிட்ட பஞ்சாயத்து யூனியன் தலைவருக்கு மட்டும் அளிப்பதால், அது சங்கடமான நிலைமைக்கு கொண்டு போய்விடும். அதனால் நெருக்கடிகள்தான் உண்டாகும் என்று இன்றைக்கு இந்த சபையிலும், முன்னாலே மேல் சபையிலும் விவாதிக்கப்பட்டிருக்கிறது. அதேபோல் இதைப் பற்றி எவ்வளவோ வெளியிலே பேசப்பட்டும் இருக்கிறது; எழுதப்பட்டும் இருக்கிறது. இன்றைக்கு அனுபவ ரீதியாக எந்த அளவிற்கு போகலாம். எந்த அளவில் போனால் காரியம் நல்ல முறையில் நடக்கும், அதனால் நமக்கு நல்ல பலன் கிடைக்கும், அதற்கு எந்த மாதிரியான முறையிலே திறமையான நிர்வாக இயந்திரத்தை அமைப்பது என்ற அடிப்படைகளையெல்லாம் யோசித்து தீர்மானித்துதான், இந்த பஞ்சாயத்து யூனியன் சட்டம் இன்றைக்கு உருவாக்கப்பட்டிருக்கிறது.

இதை விட்டுவிட்டு, திட்ட அதிகாரிகளுக்கு அதாவது பி. டி. ஓ. க்களுக்கு ஜீப் ஏன் இருக்க வேண்டும்? ஏன் பஞ்சாயத்துத் தலைவர்களிடம் ஜீப் இருக்கக்கூடாது என்று சொல்லுகிற நிலைமையைப் பார்க்கும்போது, இன்றைக்கு எந்த முறையிலே நிர்வாகம் நடக்க வேண்டியிருக்கிறது என்பதைத்தான யோசிக்க வேண்டியிருக்கிறது. அந்த ஜீப் அங்கிருக்கக் கூடிய யூனியன் தலைவர்களுக்காகவோ, அல்லது திட்ட அதிகாரிகளுக்காகவோ அமைக்கப்படவில்லை. நிர்வாகம் நல்ல முறையிலே நடப்பதற்காக ஜீப் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அந்த நிர்வாகத்தை நடத்துகின்ற திட்ட அதிகாரி, எக்ஸ்டென்ஷன் ஆபீசர், மற்றும் இதர டெக்னிகல் ஆபீசர்கள் பல இடங்களுக்குச் சென்று வேலைகளைத் துரிதமாகச் செய்வதற்காகத்தான் இந்த ஜீப் கொடுக்கப்பட்டிருக்கிறது.

அதேபோல் பஞ்சாயத்துக்களாக இருந்தாலும் சரி, பஞ்சாயத்து யூனியனாக இருந்தாலும் சரி இதிலே கட்சி பேதங்களைக் கொண்டுவராமல் ஒற்றுமையாக இருந்து, இதிலே நன்மை ஏற்படுவதற்கான ஒரு சூழ்நிலையை இந்த பஞ்சாயத்து யூனியன் ராஜ்யம் தரும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். அதே சமயத்திலே பஞ்சாயத்து யூனியன் தலைவராக வருகிறவர்கள், பொறுப்புள்ள நிலைமையிலே எல்லா விஷயங்களையும் ஆராய்ந்து, பஞ்சாயத்து யூனியனை நல்ல முறையில் எடுத்து திறமையாக நடத்தவேண்டும் என்ற எண்ணத்தோடு செயலாற்றுவார்களானால், பல நல்ல காரியங்களை அவர்களால் சாதித்துக் கொள்ளமுடியும். அதிகாரிகளும் அதே மாதிரிதான். அதிகாரிகள் நல்ல மனப்பான்மை உள்ளவர்களாக, மக்களிடத்திலே அனுதாபம் உள்ளவராக இருப்பாரேயானால், அந்த அளவிற்குத் திறமையான முறையிலே காரியங்களைச் செய்யமுடியும். இரண்டும் ஒன்றாக அமைந்தால், அதாவது பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் நிர்வாகப் பொறுப்பிலே அக்கறையுள்ள பஞ்சாயத்து யூனியன் தலைவரும், அதே போல் நல்ல, பொறுப்புள்ள, திறமையுள்ள அதிகாரி ஒருவர் அவருடன் சேர்ந்து இணைந்து வேலை செய்வதால் அங்கு கட்டாயம் நல்ல வேலைகள் நடைபெறும்.

நல்ல அதிகாரிகள் என்று நாம் சொல்லும்போது, அவர்கள் மட்டும் எங்கேயிருந்து வருகிறார்கள்? நம்முடைய சமுதாயத்திலே இருந்துதான். திறமையில்லாத, ஒழுக்கமில்லாத அதிகாரிகள் இருக்க வேண்டும், வர வேண்டுமென்று நாம் எதிர்பார்ப்பதுகூட கிடையாது. எதிர்பாராத கஷ்டங்கள் வந்தாலும் கூட அதையெல்லாம் பொருட்படுத்தாமல் நல்ல முயற்சியுடன் வேலை செய்யக்கூடிய அதிகாரிகள்தான் இருக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோம். அப்படியிருந்தும், நாம் அதிகாரிகள் மேல் குற்றங்கள் சொல்லும்போது, அந்த அதிகாரி இன்றைக்கு சமுதாயத்திலே உள்ள குறைகளைத்தான் அநேகமாகச் செய்பவராக இருப்பார். ஒன்றிரண்டு பேர் கொஞ்சம் இதைவிட அதிகமாகப் போகலாம். இந்தக் காட்சியைத்தான் நாம் இன்றைக்குப் பார்க்கிறோம். அதிகாரிகள் என்றால், அவர்கள் மட்டும் எங்கிருந்து வந்தவர்கள்? நம்முடைய குடும்பத்திலிருந்து, நம்முடைய கிராமத்திலிருந்து, நம்முடைய சமுதாயத்திலே இருந்துதான் அவர்களும் வருகின்றனர். ஆகவே இன்றைக்கு அதிகாரிகளை ஏதோ புறம்பாக ஒதுக்கி வைத்துப் பேசுவது தவறு. நிர்வாக

[Sri C. Subramaniam] [24th March 1961

இயந்திரத்திலே நல்லெண்ணமும், நம்பிக்கையும் இருந்து, அதிலே நிரந்தரமான ஒரு பற்றிருந்து பணியாற்றக்கூடிய ஊக்கம் இருந்தால்தான் எந்த திட்டமும் வெற்றியுடன் நடக்கமுடியும். ஆகவேதான் இப்போது இந்த முறையிலே தேர்ந்தெடுப்பதற்கு பல ஏற்பாடுகள் செய்யப்படுகிறது. ஆகவே இன்றைக்கு எந்தக் காரியங்களும் ஜனநாயக அடிப்படையிலே தான் நடக்கிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஜனநாயக அடிப்படையிலே அதிகார வர்க்கமே இருந்து நிர்வாகத்தை நடத்தக்கூடியதை இன்றைக்குப் பார்க்கிறோம். ஆனால் அதிகார வர்க்கமில்லாமல், நிர்வாகம் ஏற்பட்டு இருக்கிறதா என்று பார்த்தால் நாம் பார்க்க முடியாத ஒரு காட்சியாகத் தான் அது இருக்கிறது. அதிகாரிகள் மீது நம்பிக்கை இல்லாத முறையிலோ, அதிகாரிகளைப் புறக்கணிக்கின்ற முறையிலோ, அல்லது வேறு எந்த முறையிலோ நாம் நிர்வாகத்தை நல்ல முறையிலே நடத்த முடியுமென்று சொல்ல முடியாது ; பார்த்திருக்கவும் முடியாது. ஆகவேதான் இன்றைக்கு நல்ல நிர்வாக அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்க முயிற்சிகள் செய்கிறோம். அவர்கள் நல்ல முறையிலே, பல தேவைகளும் அமைந்திருக்கக்கூடிய முறையிலே, திறமையுள்ளவர்களாகவும் அதே சமயத்தில் பண்புள்ளவர்களாகவும் இருக்கிறார்களா என்று பார்த்துத்தான் தேர்ந்தெடுக்கிறோம். அவர்கள் திறமையாக இருக்கிறார்கள் என்றால், அது சமுதாயத்திலே இருக்கக்கூடிய சூழ்நிலையையும், வளர்ச்சியையும்தான் எடுத்துக் காட்டுகிறது. அப்படிப்பட்ட ஒரு நல்ல அதிகாரி இருந்தாலும், அவரும், பொதுமக்களும் ஆகிய இரண்டு பேரும், ஒருவரிடையே ஒருவர் போட்டா போட்டி நிலைமையை ஏற்படுத்திக் கொள்ளாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம், இரண்டு பேரும் ஒற்றுமையாக இருக்கக்கூடிய இயந்திரம்தான் சிறந்ததாக நடக்க முடியும் இல்லாவிட்டால் நடக்க முடியாது. உதாரணம் சொல்ல வேண்டுமானால், நிர்வாகத்திலே இருக்கக்கூடிய அதிகாரி ஒரு கார் ஓட்டக்கூடியவர்போல, இந்த இடத்திற்கு கார் போக வேண்டுமென்று அவர் ஓட்டிக்கொண்டு சென்றார். ஆனால் காரிலே பின்னால் உட்கார்ந்துக்கொண்டு போகிறவர், 'அப்படித் திருப்பாதே, இப்படித் திருப்பு, இப்படித் திருப்பாதே, அப்படித் திருப்பு' என்று சொன்னால் அவரால் சரியாக காரை ஓட்ட முடியாது. அப்படி காரை ஓட்டிக்கொண்டு போகும்போது, ஏதாவது பழுதடைந்தால், அதை உட்கார்ந்துகொண்டிருப்பவர்கள் பார்க்க வேண்டும். டிரைவர்தான் பார்க்க வேண்டுமென்று சொல்வது முடியாத காரியம். அதுபோலத்தான் இந்த திசையிலே செல்ல வேண்டும், இந்த மார்க்கத்திலே செல்வது நல்லது என்பதையெல்லாம் இந்த இடத்திலே நிர்ணயம் செய்யக்கூடியவர்கள் பொதுமக்கள். பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதை நிறைவேற்றுவதற்குத் தான் அவர்களுக்குப் பயிற்சியும் கொடுக்கப்படுகிறது. அந்தக் காரியங்களை பூர்த்தி செய்வதற்குத்தான் அதிகாரிகள் இருக்கிறார்கள், இருக்க முடியும் என்பதை நான் மறுபடியும் வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

நல்லதொரு நிர்வாக இயந்திரத்தை அப்படிப்பட்ட நிர்வாக அதிகாரிகளால்தான் நல்ல முறையிலே நடத்திக் கொண்டு போக முடியும். அதை விட்டு விட்டு, நாங்கள் போய் நல்ல முறையிலே நிர்வாகத்தை ஓட்டுகிறோம் என்று உட்கார்ந்து கொண்டுவிட்டால், அதன் அமைப்பே வேறு விதமாகத் தான் இருக்கும். நாம் எந்த இடத்திலே உட்கார வேண்டுமோ அந்த இடத்தில் உட்கார்ந்து கொள்ளவேண்டும். அப்படிப்பட்ட இடத்தில் உட்கார்ந்து கொண்டு, நல்ல முறையிலே ஓட்டப்படுகிறதா, ஏதாவது தவறுகள் ஏர்படுகிறதா, அப்படித் தவறுகள் நேர்ந்தால் அதை நல்ல முறையிலே எடுத்து விளக்கி தவறுகள் நடக்காதபடி பார்த்துக்கொள்ளுவதுதான் நம்முடைய கடமை, பொறுப்பாகும் என்பதை வற்புறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

ஆகவேதான் இன்றைக்கு இதைப் பரவலாக ஒவ்வொரு கிராமங்களிலும் இந்தப் பணிகளை நடத்துகிறோம். அப்படிச் செய்யும்போது ஆங்காங்குள்ள பொதுமக்கள் இதைத் திறமையாக ஏற்று நடத்துவதற்கு எந்த விதமாகச் செய்யவேண்டும், என்னென்ன உதவிகள் செய்ய வேண்டும் என்பதை

யெல்லாம் வைத்துக் கொண்டு செய்யக்கூடிய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்து வதன் மூலம்தான், நாம் இந்தத் திட்டம் வெற்றி பெறுவதற்கு உதவி செய்ய முடியுமே தவிர, நாம் நினைக்கிறபடி மாற்றிவிட முடியாது. அப்படி அதை மாற்றிவிட நினைக்கும் போது அதிகாரம் இந்தக் கையிலே இருக்க வேண்டும், அந்தக் கையிலே இருக்க வேண்டுமா என்று பார்க்கும்போது எந்தத் திட்டத்தையும், நாம் நல்ல முறையிலே நிறைவேற்ற முடியாது. அதேபோன்று எந்தக் காலத்திலும் எல்லோரும் ஒப்புக்கொள்ளும்படி ஒரு காரியத்தைச் செய்துவிட முடியாது. அது மட்டுமல்ல. எப்படிப்பட்டவர்கள் செய்தாலும், இதிலே குற்றம், அதிலே குற்றம், இதை இப்படி அமைக்க வேண்டும், அதை அப்படி அமைக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டு தான் இருப்பார்கள். ஆகவேதான் அனுபவத்தை வைத்துக் கொண்டு, செல்லச்செல்ல பல நல்ல காரியங்களை நிறைவேற்றுவதற்கு முயற்சி செய்ய முடியுமென்பதை வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, முக்கியமாக வலியுறுத்தப்பட்டது ரோடுகளைப்பற்றி; ரோடுகளை பஞ்சாயத்துகளிடமும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களிடமும் ஒப்படைத்தோமானால், அவர்களுக்கு போதிய நிதி வசதி இல்லாத காரணத்தினால், அந்த ரோடுகள் பாழுபட்டுவிடும் என்ற கருத்து தெரிவிக்கப்பட்டது. அதைச் சர்க்கார் உணராமல் இல்லை. பேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கிற அறிக்கையில் அது பற்றி விரிவாக கூறப்பட்டிருக்கிறது. அதை எப்படிச் சாதிப்பது என்பதுதான் இன்றைக்கு இருக்கக்கூடிய பிரச்னை. எல்லா ரோடுகளையும் சர்க்காரே எடுத்து பராமரிக்கவேண்டும் என்றால், அதற்கு ரூ. 2, 3 கோடி அதிகமாக செலவழிக்க வேண்டும். அம்மாதிரி ரோடுகள் போடுவதற்கென்று அதிகமாக ரூ. 2, 3 கோடி ஒதுக்கிவிடலாமா? கல்வி மானியத்தில் பேசும்பொழுது அதற்கு ரூ. 21 கோடி செலவழிக்கிறோம் என்று எல்லோரும் பெருமையாக பேசிக் கொண்டோம். அதைக் குறைத்து அதிலிருந்து ரூ. 2, 3 கோடி எடுத்துக் கொள்ளலாமா? அதேமாதிரி சுகாதார மானியத்தில் பேசும்பொழுது அதற்கு மானியம் குறைவு என்று கூறப்பட்டது. அதிலிருந்து ஒரு கோடி ரூபாய் 'கட்' செய்து எடுத்துவிடலாமா? இப்படி எதிலே கைவைத்து இந்தப் பணத்தை மிச்சரிப்பது என்று நாம் யோசித்துப் பார்க்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். எல்லாவற்றையும் ஒட்டுமொத்தமாகப் பார்த்து பரிசிலனை செய்து ஒரு முடிவு எடுக்கவேண்டும், அவ்வப்பொழுது அந்த மானியத்தில் பேசும்பொழுது அந்த மானியத்திற்கு அதிகத் தொகை வேண்டும் என்று சொல்லுகிற மனப்பான்மை இருக்குமேயானால், வாதத்திற்கு வேண்டுமானால் அம்மாதிரி பேசலாம் என்ற நிலைமைதான் ஏற்படும். ஆகவே, மானியங்களை ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு நாம் விவாதித்தாலும்கூட, ஒரு மானியத்தை விவாதிக்கும்பொழுது அதை மட்டும் பற்றி சொல்லிக்கொண்டிருந்தால் பிரயோசனம் இல்லை, மற்ற மானியங்களையும் கொஞ்சம் கவனிக்க வேண்டும்- மற்ற மானியங்களைப்பற்றி கவலையில்லை, இந்த மானியத்திற்கு அதிகமாகத் தொகை வேண்டுமென்று சொல்லுவதாயிருந்தால் அதை ஏற்றுக்கொள்ளுவது என்பது முடியாத காரியம்.

ரோடுகள் நல்ல முறையில் பராமரிக்கப்பட வேண்டும், அதற்கு வேண்டிய முயற்சிகளை, செய்யவேண்டுமென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களிடம் இந்த ரோடுகளை ஒப்படைப்பதற்கு முன்பாக, பல முக்கியமான ரோடுகளைப் பழுது பார்த்து சீரமைப்பதற்காக அதிகச் செலவு ஏற்படுவதனால் அதற்கான உபமானியம் கோரியிருக்கிறேன் ரூ. 22 லட்சமோ அல்லது ரூ. 12 லட்சமோ என்று நினைக்கிறேன். அம்மாதிரி தொகை ஒதுக்கி, முக்கியமான ரோடுகளை சீர்தூக்கி, அவர்கள் கையிலே ஒப்படைக்கவேண்டும் என்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சர்க்கார் இதை உணராமல் இல்லை. இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையில் எப்படி இதற்கு தீர்வு காண முடியும், எப்படி இதை நிவர்த்திக்க முடியும், என்பதை உணர்ந்துதான், அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. எல்லாவற்றையும் உடனே சரியாக செய்துவிடவேண்டும் என்ற முறையில் இது செய்ய முடியாத காரியம். இது ஒரு லட்சியமாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, ரோடுகளை சர்க்கார

ஏற்றுக்கொள்ள வேண்டுமா அல்லது பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமா என்பதைப்பற்றி யோசித்து முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. பஸ்கள் ஓடக்கூடிய ரோடுகளை சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற ஒரு முடிவை எல்லோரும் விவாதம் செய்த பிறகு, ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இது உடனடியாக ஆகக்கூடிய காரியம் இல்லை. படிப்படியாக ஆகவேண்டும் என்றும் முடிவெடுக்கப்பட்டது. ஆனாலும் அதற்கு 10, 15 ஆண்டுகள் ஆகக்கூடாது, எவ்வளவு சீக்கிரம் செய்வதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமோ, எடுத்துக்கொள்ளவேண்டும் என்ற கருத்தை யாராவது வலியுறுத்தினார்களேயானால், அந்தக் கருத்தை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். அனுபவத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு நமக்கிருக்கக்கூடிய நிதி வசதியை அடிப்படையாக வைத்துக்கொண்டு இதையும் கூட நிறைவேற்ற முடியுமே தவிர, நாம் இது மாதிரி ஒப்புக் கொண்டிருக்கிறோம், அடுத்த ஆண்டிலேயே எல்லா பஸ் போகிற ரோடுகளை யெல்லாம் சர்க்கார் எடுத்துக்கொண்டுவிட வேண்டும் என்று சொன்னால் அதற்கு போதிய நிதி வசதி இருக்க முடியாது, நிர்வாக இயந்திரமும் நம்மிடத்தில் இருக்க முடியாது என்பதைத்தான் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ரோடுகளை பொறுத்த வரையில், சர்க்கார் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி நாம் முன்பு யோசித்து ஒரு முடிவு எடுத்திருக்கிறோம், அந்த முடிவை நாம் உடனடியாக நடைமுறையில் கொண்டு வருவதாகவும் ஒப்புக் கொண்டிருக்கிறோம். படிப்படியாக முக்கியமான எல்லா ரோடுகளையும் சர்க்கார் நேரடியாக எடுத்துக்கொண்டு, அவைகளை நல்ல தரத்தில் வைப்பதற்கு முயற்சி செய்யும் என்கின்ற உறுதியை நான் இப்பொழுது சொல்லிக்கொள்ளலாமே தவிர, எவ்வளவு சீக்கிரம் அதைச் செய்துவிட முடியும் என்பதைப்பற்றி உடனடியாக சொல்லுவதற்கு இல்லை. அதற்கு ஒரு திட்டம் வகுக்கவேண்டும் அரசாங்கம், ஒரு திட்டம் வகுத்து அந்தத் திட்ட அடிப்படையில் படிப்படியாக எடுத்துக்கொள்ளுவ தற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று வேண்டுமானால் சொல்லலாம்.

நீலகிரித் தொகுதியிலிருந்து வந்திருக்கும் அங்கத்தினர் அவர்கள் அவருடைய பகுதிகளில் இருக்கக்கூடிய கஷ்டங்களைப்பற்றி எடுத்துச்சொன்னார்கள் அது எல்லோராலும் ஒப்புக்கொள்ளக் கூடியது. ஏனென்றால் அது மலைப் பிரதேசம். அங்கு இருக்கிற பல கிராமங்களில் அதிக மக்கள் வசிக்கக்கூடிய நிலைமையில் இல்லை. நெருங்கி கிராமங்கள் இருக்கக்கூடிய நிலையிலும் இல்லை. பரவலாக மக்கள் இருக்கக்கூடிய நிலைமையில் இருக்கிறது. அது விஷயத்திலே சாதகமாக இருக்கிறது. ஏனென்றால் ஜனங்கள் நெருக்கமாக இருக்கும்பொழுது, ஜனநெருக்கம் அதிகமாக இருப்பதே ஒரு பெரிய பிரச்சனையாக விளைந்து விடுகிறது. ரொம்பப் பரவலாக இருந்தாலும் அதுவும் ஒரு பிரச்னையாக இருக்கிறது. இரண்டிற்கும் மத்தியில் இருந்தால் எல்லாக் காரியங்களையும் சரிவர செய்யக்கூடிய நல்ல சூழ் நிலை ஏற்படுகிறது என்பதை நாம் உணர்ந்திருக்கிறோம். ஏ.பி.ஸி.டி. எந்தப் பிரிவிலும் அந்தப் பிரதேசம் வராது என்று சொன்னார்கள் அந்த ஏ.பி.ஸி.டி. என்ற அடிப்படையே இல்லை. அந்த முறையில் எடுத்துக் கொள்ளாமல் நீலகிரி ஜில்லாவைப் பொறுத்தமட்டில், மலைப் பிரதேசங் களைப் பொறுத்த அளவில், அந்தப் பகுதிகளுக்கு எந்த அடிப்படையில் உதவவேண்டும். என்று ஆலோசனை செய்து கூடிய சீக்கிரம் ஒரு முடிவு எடுக்கப்படும் என்பதைத்தான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அதே சமயத்தில், அங்குள்ள கிராமங்களுக்கு ரோடுகள் என்று சொல்லுவது அபூர்வமாகத்தான் இருக்கும். பல இடங்களில் ரோடுகள் போடவேண்டும், சர்க்காரால்தான் போட முடியும். சர்க்காரால் தான் அவைகளை பராமரிக்க முடியும் என்பதையும் ஓரளவு உணர்ந்திருக்கிறோம். ஆகையினால் அந்த அடிப்படையில் நீலகிரி பிரதேசத்திற்கு வேண்டிய சௌகரியங்கள் எப்படி செய்துகொடுப்பது, அதே போன்று மற்ற மலைப் பிரதேசங்களில் இருக்கக்கூடிய கிராமங்களுக்கும் வேறு அடிப்படையிலே எப்படி உதவி செய்யவேண்டும் என்பதைப் பற்றி நாம் யோசிக்க வேண்டி யிருக்கிறது. கோத்த கிரியை டிரைபல் பிளாக்காக எடுத்துக்கொள்ளவேண்டு

24th March 1961] [Sri C. Subramaniam]

மென்று சொன்னார்கள். அங்கு இருக்கக்கூடிய ஆதி பரம்பரையினருக்கு வேண்டிய எல்லா உதவிகளேயும், வசதிகளேயும் செய்வதற்கு கம்யூனிடி டெவலப்மெண்டு மூலமாக மட்டும் அல்ல, ஹரிஜன நல இலாகா மூலமாகவும் அதற்கு எல்ல விதமான முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்படும் என்ற அளவுக்கு சொல்ல முடியுமே தவிர, அங்கே தனிப்பட்ட என்ன திட்டம் நிறைவேற்ற முடியும் என்பதை நான உடனடியாக சொல்ல முடியாத நிலேயில் இருக்கிறேன்.

அடுத்தபடியாக, சம்பள விகிதத்தைப் பற்றி சொல்லப்பட்டது. பஞ்சாயத்து யூனியன் பணியாளர்களேப் பொறுத்தவரையிலும், சம்பளக் கமிஷன் சிபாரசு செய்த சம்பள விகிதத்தில்தான அவர்களே அங்கு நியமித்திருக்கிறார்கள். அதிலே ஒன்றும் கஷ்டம் இல்லே. (குறுக்கீடு). சம்பளக் கமிஷன் என்ன சிபார்சு செய்திருக்கிறதோ அந்த அடிப்படையில் தான் அவர்கள் சம்பளமும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதிலே ஏதாகிலும் குறை இருக்குமானல், அதை யாராவது எடுத்துக்காட்டினுல், அதைப் பரிசிலனே செய்து பார்ப்பதற்குத் தயாராக இருக்கிறேன்.

அடுத்தபடியாக, பஞ்சாயத்துகளேப் பொறுத்தவரையில், சென்ற பிப்ரவரி மாதத்தில் சம்பளக் கமிஷன் சிபாரிசு செய்திருக்கிற அடிப்படையிலே அவர்களுக்கு சம்பளம் கொடுக்கவேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கின்றது. அது இன்னும் சில இடங்களில் அமுலுக்கு வரவில்லே என்ருல் உத்தரவு அங்குபோய சேரவில்லேயோ அல்லது உத்தரவு போய்ச் சேர்ந்தாலும், அதை அமுல் நடத்துவதற்கு அங்கு காலதாமதம் ஆகிறதோ என்று தான் சொல்லவேண்டும். அதற்கான உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கடைசியாக, நான் இதிலே ஒரு கருத்தை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். நாம் இன்றைக்கு ஏற்றுக்கொண்டிருக்கக்கூடிய அமைப்பு உண்மையிலேயே ஒரு புரட்சிகரமான அமைப்பு. வெறும் வாய்வார்த்தையாக சொல்லக் கூடியது அல்ல. இதனுல் கிராம மக்கள் பல சௌகரியங்கள் பெறுவது மட்டுமலல. பிறருடைய உதவி பெற்று வாழவேண்டுமென்ருல், சில காலத்திற்குத்தான் வாழ முடியும். இன்றைக்கு நல்வாழ்வு வாழவேண்டும் என்று சொன்னுல் அது நம்முடைய சக்தியைப் பொறுத்திருக்கிறது, ஆற்றலேப் பொறுத்து இருக்கிறது. இன்றைக்கு நல்வாழவு வாழவேண்டுமானுல், அதை நிர்ணயித்துக்கொள்ளக் கூடிய பொறுப்பு அவர்களுக்கு இருக்கவேண்டும். அதை நிர்ணயித்து நிறைவேற்றுவதற்குவேண்டிய சக்தி, திறமை அவர்களுக்கு ஏற்படவேண்டும். அந்த அடிப்படையில் தான் பஞ்சாயத்து ராஜ்யம் இன்றைக்கு அமைக்கப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ராஜ்யம் இன்று அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அந்த அமைப்பு நிறைவேறவேண்டுமென்று சொன்னுல் நாம் அனுதாபத்துடன் மட்டும் அல்ல, நமக்கு இருக்கக்கூடிய, மன வேற்றுமைகளே, கருத்து வேற்றுமைகளே ஒருபுறம் ஒதுக்கிவைத்துவிட்டு, கிராம மக்களுடைய நன்மை என்ன என்பதைப்பற்றி நாம் ஒரு சிறிது அளவு ஆராய்ந்து பார்ப்போமானுல், இதில் கட்சிக்கு இடம் இருக்கவே முடியாது கட்சி பிரசாரம் செய்கிருர்கள் என்று சொல்லுவதற்கு இடம் இருக்கவே முடியாது. கிராம மக்கள் எந்த அளவு மேலே முன்னேற வேண்டும் என்பதைப்பற்றி கட்சி அடிப்படையில் நினைக்கவேண்டிய அவசியம் இல்லே. துரதிருஷ்டவசமாக கிராம மக்களுக்கு ஏதோ நல்லது செய்கிறோம் என்று சொன்னுல், கட்சிப் பிரசாரம் செய்கிருர்கள் என்ற சந்தேகம் எதிர்க் கட்சியினருடைய மனதில் அவர்களேயும் மீறி வந்து விடுகிறது. நான் மிகவும் தாழ்மையுடன் வலியுறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன், இன்றைக்கு அங்கு இருக்கக்கூடிய நிலேமையிலே கட்சி அடிப்படையிலே அவர்கள் பார்க்கக் கூடாது. நல்ல காரியங்கள் நடைபெறுவதனுல் காங்கிரசுக்கு செல்வாக்கு ஏற்பட்டு விடுமோ என்ற அடிப்படையில் நினைக்கக்கூடாது என்கிற ஒரு கருத்தை அவர்கள் ஒப்புக்கொள்வார்களேயானுல், இந்தக் காரியங்களெல்லாம் நன்ருக நிறைவேற முடியும் என்பதில் சந்தேகம் கிடையாது. பஞ்சாயத்து

அல்லது பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் கட்சி அடிப்படையில் இன்றைக்கு காங்கிரசுக்காரர்கள் நின்றது கிடையாது மற்ற கட்சிக்காரர்கள் கட்சி அடிப் படையில் நின்றிருக்கிறார்கள் சில இடங்களில். அதை அவர்கள் ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

1-30. p.m.

இன்றைக்கு நான் அவர்களை குற்றம் சொல்லவில்லை, அது அவர்கள் எடுக்கவேண்டிய முடிவு. ஆனால், இன்றைக்கு பஞ்சாயத்துகள் ஏற்பட்ட பிறகு, பஞ்சாயத்து கௌன்சில்கள் ஏற்பட்ட பிறகு, கட்சி அடிப்படையில் நோக்குவது சரியில்லை. அப்படி யில்லாமல் அவை நடைபெற நாம் எல்லோரும் உதவி செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அந்த அடிப்படையில் தான் எந்தக் கட்சியாக இருந்தாலும் பஞ்சாயத்து யூனியன் கௌன்சிலில் சேர வேண்டும். அவர்கள் ஆலோசனை கொடுக்கவேண்டுமென்று அந்த அடிப்படையில் ஏற்பாடு செய்திருக் கிறோம். இங்கே இருக்கக் கூடிய கட்சி நோக்குகளை அங்கே பஞ்சா யத்துக் கௌன்சிலில் கொண்டு வராமல், மக்களை முன்னேற்ற வேண்டும் என்று பணியாற்றினால், இன்றைக்கு எடுத்து இருக்கக்கூடிய நல்லதொரு திட்டங்களெல்லாம வெற்றி பெற்று, அவர்கள் இன்னும் அதிகப் பொறுப்பை வகிக்கக் கூடிய அளவுக்கு வளர்ந்து. அவர் களுக்கு இன்னும் அதிகமான பொறுப்புகளைக் கொடுக்கக் கூடிய நிலைமை ஏற்பட்டு, எங்கும் நல் வாழ்வு பரவ, சோஷலிஸ சமுதாயத்தில் முன்னேறிச் செல்கிற திருப்தியும், பெருமையும் உண்டாகும் என்ற கருத்தை வலியுறுத்திச் சொல்லிக் கொண்டு, ஒரு மானியத்தின் மீது வெட்டுப் பிரேரணையே கொடுக்காமல் இருந்தாற்போல, இதையும் பொதுவான மானியம் என்ற காரணத்தினால் வெட்டுப் பிரேரணையை வாபஸ் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடிக்கிறேன்.

Sri A. GOVINDASAMY : பஞ்சாயத்துச் சட்டம் நிறைவேற்றும் போது பஞ்சாயத்திலிருந்து கௌன்சிலுக்குத் தலைவரைத்தான எடுக்க வேண்டும் என்ற திருத்தத்தை நாங்கள் கொடுத்தபோது, அதை அலட்சியப்படுத்திவிட்டு பிறகு, சர்க்காரே செய்துவிட்ட காரியத்தை அவசரத்தில் செய்த முடிவு என்று சொல்கிறாரே சரியா ?

The Hon Sri. C. SUBRAMANIAM : அது அவசரத்தில் எல்லோரும் சேர்ந்து செய்த முடிவு நான் மட்டும் தனியாகத் தேர்ந்தெடுக்க வேண்டு மென்று சொல்லவில்லை. அங்கத்தினர் கட்சி பிரதிநிதிகளும் சேர்ந்து செய்த முடிவுதான் அது : குறை என்று ஏற்பட்டதும், அது திராவிட முன் னேற்றக் கட்சி சொன்ன கருத்து என்று நாங்கள் ஒதுக்கவில்லை. இன் றைக்கு குறையென்றதும், திராவிட முன்னேற்றக் கழகத்தின் கருத்தா னாலும அதை ஏற்றுக்கொள்ளுவோம் என்பதை நிரூபித்திருக்கிறது சர்க்கார். அம்மாதிரியே திராவிட முன்னேற்றக் கழகமும செய்ய முன் வந்தால், அது உண்மையாகவே முன்னேற்றக் கழகமாக இருக்கும் என்று தெரிவிக் கிறேன். (சிரிப்பு)

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri S. M. Annamalai pressing his cut motion?

Sri S. M. ANNAMALAI : Yes, Sir.

DEPUTY SPEAKER : The question is—

" That the allotment of Rs. 5,01,99,900 under Demand XXVI —Community Development Projects, etc., be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

" That the Government be granted a sum not exceeding Rs. 5,01,99,900 under Demand XXVI—Community Development Projects, etc."

24th March 1961]

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER: The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,64,50,000 under Demand XXXIV—Other Miscellaneous Contributions and Assignments."

The Demand was put and carried and the Grant was made.

IV.—ANNOUNCEMENT BUSINESS OF THE HOUSE

DEPUTY SPEAKER: I have to announce to the House that the Business Advisory Committee met today and decided the following programme of the House from 25th March 1961 onwards in addition to the financial business that has already been fixed for those days:—

25th March 1961 .. .. 1 The Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 12 of 1961).

2 The Madras Irrigation Cess (Amendment) Bill, 1961. (L.A. Bill No. 17 of 1961).

27th March 1961 .. .. 1 The Madras General Sales-tax (Second Amendment Bill, 1961 (L.A. Bill No. 15 of 1961).

2 The Madras (Added Territory) Extension of Laws Bill, 1961. (L.A. Bill No. 16 of 1961).

28th March 1961 .. .. 1 The Madras Village Courts (Amendment) Bill, 1961 as passed by the Council.

2 The Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961 as passed by the Council.

3 The Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961).

4 The Madras Chit Funds Bill, 1960. (L.A. Bill No. 5 of 1960). (Consideration of Council Amendments.)

5 The Land Acquisition (Madras Amendment) Bill, 1961 (L.A. Bill No. 11 of 1961).

6 The Madras Entertainments Tax (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 13 of 1961.)

7 The Indian Stamp (Madras Amendment) Bill, 1961. (L.A. Bill No. 14 of 1961).

The Bills which have not been passed on 28th March will be considered on the 29th March 1961.

The Madras Co-operative Societies Bill, 1961, will be introduced on the 27th March 1961 and will be taken up for discussion on the 30th March 1961.

The House will adjourn on the 30th March 1961.

I have also to announce to the House that the items included under "VII. Government Bills" in the Agenda for 25th March 1961, already circulated, will be taken up immediately after 'Item VI. Government Bills' on that date. If necessary, the House will sit till 2-00 p.m. There willl be no afternoon sitting on that date.

The House will now adjourn and meet again at 8-30 a.m. tomarrow.

The House then adjourned.